# உள்ளடக்கம்



*முன்னட்டையில்: 2023 மார்ச் 5 அன்று திறக்கப்பட்ட கீழடி அகழ்வைப்பகம்; படம் உதவி – எழுத்தோவியர் நாணா*

தமிழ் மரபு அறக்கட்டளை

பன்னாட்டு அமைப்பின்

# திணை காலாண்டிதழ் — 32

ஜனவரி - மார்ச் 2023 இதழ்

ஆசிரியர் : முனைவர் க. சுபாஷிணி

பொறுப்பாசிரியர் : முனைவர் தேமொழி

இணை பொறுப்பாசிரியர் : குமரன் சுப்ரமணியன்

# தலையங்கம்

*— முனைவர் க. சுபாஷிணி*



வணக்கம்.

தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு ஆகஸ்ட் மாதம் 2001 ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட காலம் முதல் தொடர்ச்சியாகத் தனது பணிகளை மேற்கொண்டு வருகின்றது என்பதை உலகத் தமிழர்கள் அறிந்திருப்பீர்கள்.

2015 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் ஆய்வுக் காலாண்டிதழான 'மின்தமிழ்மேடை' ஆய்விதழ் தொடங்கப்பட்டது. இந்த இதழ் கடந்த 2022 ஆண்டு அக்டோபர் மாதம் வரை 31 இதழ்களாக ஒவ்வொரு காலாண்டிலும் வெளியிடப்பட்டு கூகுள் புக்ஸ் தளத்திலும் இலவசமாக ஆய்வாளர்களுக்குப் பயன் தரும் வகையில் வலையேற்றம் செய்யப்பட்டுள்ளது [பார்க்க: THFi தளத்தில்: https://thf-news.tamilheritage.org/category/mintamilmedai/ : கூகுள் புக்ஸ் தளத்தில்: https://tinyurl.com/GoogleBooks-MinTamilMedai]

2020 ஆம் ஆண்டு ஜூன் மாதம் முதல் 'திணை' என்ற பெயரில் திங்களிதழாக செய்தி மடல் ஒன்றினை தமிழ் மரபு அறக்கட்டளை வெளியிடத் தொடங்கினோம். கடந்த 2022ஆம் ஆண்டின் இறுதி வரை 31 மடல்களாக ஒவ்வொரு மாதமும் இந்தச் செய்தி மடல் தமிழ் மரபு அறக்கட்டளையின் நடவடிக்கைகள், வெளியீடுகள், ஆய்வுகள் ஆகியவற்றைத் தாங்கி வெளிவந்தது [பார்க்க: https://thf-news.tamilheritage.org/category/thinai/].

இவ்வாண்டு தொடக்கம் முதல் இந்த இரண்டு வெளியீடுகளையும் ஒன்றிணைத்து அதாவது மின்தமிழ் மேடை ஆய்வுக்காலாண்டிதழையும் திணை மாதாந்திர செய்தி மடலையும் ஒன்றிணைத்து புதிய வடிவில் திணை காலாண்டிதழை தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு வெளியிடுகின்றோம் என்ற செய்தியைப் பகிர்ந்து கொள்வதில் மகிழ்கின்றோம்.

புதிய வடிவில் ஒவ்வொரு மூன்று மாதங்களுக்கு ஒரு முறையும் ஏப்ரல், ஜூலை, அக்டோபர், ஜனவரி என்ற வகையில் இக்காலாண்டிதழ் வெளிவர உள்ளது. இந்த இதழ் ஒவ்வொரு மூன்று மாதங்களிலும் தமிழ் மரபு அறக்கட்டளை உறுப்பினர்களால் எழுதப்பட்ட படைப்புகளைத் தாங்கியும் தமிழ் மரபு அறக்கட்டளையின் வெளியீடுகள், நூல்கள், நிகழ்ச்சிகள் ஆகிய பல்வேறு செய்திகளை உள்ளடக்கிய வகையிலும் வெளிவர உள்ளது. அந்த வகையில் மூன்று மாதங்கள் நடைபெற்ற எல்லா நிகழ்ச்சிகளின் தொகுப்பாகவும் இந்த காலாண்டிதழ் விளங்கும்.

தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் நடவடிக்கைகளை அறிந்து கொள்வதற்கும் அதன் செயல்பாடுகளைத் தொடர்வதற்கும் ஆர்வம் உள்ளவர்கள் இந்த காலாண்டிதழை வாசித்துப் பயன்பெறலாம்.

திணை காலாண்டிதழின் பொறுப்பாசிரியராக முனைவர் தேமொழியும், இணைப் பொறுப்பாசிரியராக திரு குமரன் சுப்ரமணியமும் செயல்படுவார்கள். அவர்கள் இருவருக்கும் எனது நெஞ்சம் நிறைந்த நல்வாழ்த்துக்கள்.

தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் வரலாற்று ஆய்வுகள் மற்றும் ஆவணப்படுத்தல் நடவடிக்கைகளில் ஆர்வம் கொண்டோர் நீங்களும் இணையலாம்.

வாருங்கள்.. தமிழால் இணைவோம்!

அன்புடன்
முனைவர் க சுபாஷினி
தலைவர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு
அமைப்பு

# கடலும் தமிழும்!
# — சங்க இலக்கியக் கருத்தியல்கள்

## — ஆர்.பாலகிருஷ்ணன்



"கடல் விளை அமிழ்து!"
சங்க இலக்கியம் சொல்லும் கடல் பாற்கடலும் இல்லை! இது அந்த "அமிர்தமும்" இல்லை! உப்பைத் தான்"கடல் விளை அமிழ்து" என்கிறது சங்க இலக்கியம்!

"கடல்விளை அமிழ்தின்
கணம் சால் உமணர்"
(அகம் 169)

"கடல்விளை அமுதம் பெயற்கு ஏற்று ஆஅங்கு"
(நற்.88)

கடல் உப்பை அமுதம் என்று சொல்லலாமா? ஏன் சொல்லக்கூடாது? அது தான் சங்க இலக்கியம்! "கடைந்தவர்களுக்கே" கிடைக்காத அமுதம் நமக்குக் கிடைக்குமா? உப்பில்லாமல் பூமியிலே உயிர் இருக்குமா? பாற்கடல் அமுதம் ஆகாசக் கோட்டை! கடல் விளை அமுதம் உள்ளங்கை நெல்லிக்கனி!

அதனால்தான் தமிழ் உப்பிட்டவரை உள்ளவரை நினைக்கிறது!

அகப்பாடல்கள் மொத்தம் 1862
அவற்றில் நெய்தல் திணைப் பாடல்கள் 347
சங்கத் தமிழ்க்கரையில் கடல் அடைகள்!
பனி கடல், விரி கடல், தண் கடல், உரவு கடல், தெண் கடல், தென் கடல், முழங்கு கடல், இரும் கடல், வளை கடல், நிறை கடல், உழை கடல், மா கடல், மலி கடல், நெடும் கடல், துறு கடல், நளி கடல், விரி திரை பெரும் கடல், கலங்கு கடல், நீல் நிற பெருங்கடல், துணி கடல், மணி அன்ன நீர் கடல்.

"குண குட கடலா எல்லை" - (மது. 71, புறம். 17, பெரும். 441)

அதாவது; கிழக்குக் கடல் (Bay of Bengal) மற்றும், மேற்குக் கடல் (Arabian Sea), தென் கடல் (Southern Sea), பெரும் கடல் ( Big Sea: Indian Ocean)

பருவ மழையின் நோக்கும் போக்கும் அறிந்த பட்டறிவு இலக்கியம் சங்க இலக்கியம். பருவமழை மேகங்கள் கிழக்குக் கடலில் நீர்முகந்து மேற்கு நோக்கிச் சென்று இருண்டு மழை பொழியும்.

"குணகடல் முகந்து குடக்கு ஏர்பு இருளி"
(நற்.346)

"குணகடல் முகந்த கொள்ளை வானம்"
(அகம் 278)

"கடலை வானம் கொள்ளையடித்தால் மேகம் என்று அர்த்தம்" (திருடா திருடா 1993)

அடடா தமிழே! தமிழ் இல்லாத கடலையும், கடல் இல்லாத தமிழையும் கற்பனை செய்து பார்க்கமுடியுமா? தமிழொரு கடல்! கடலொரு தமிழ்!

மீன்:
சங்க இலக்கிய "மீன்" சொல் கடல். ஆறு, குளம் போன்ற நீர்ப்பரப்பில் வசிக்கும் மீன்கள்; நீல வானில் உலவும் மீன்கள் (நட்சத்திரங்கள்) ஆகிய இருபொருள் ஒரு சொல் ஆகும்.
சங்க இலக்கியத்தில்...
மீன் (157), மீன் வயின் (1), மீன் இனம் (1), மீனின் (11), மீனினும் (3), மீனும் (1), மீனே (1), மீனொடு (4), மீனோடும் (1)

இதில் நீர் மீன், நீலவானத்து மீன் இரண்டும் அடங்கும். நாம் இங்கே கடல் மீனைப் பேசுகிறோம்.

"கடல்மீன் தந்து கானல் குவைஇ" (நற் 388)
"பெருங் கடல் பரதவர் கோள்மீன் உணங்கலின்" (குறு 320)
"கடல் பாடு அழிய இன மீன் முகந்து" (அகம் 30)
"மீன் எறி பரதவர் மகளே நீயே" (நற் 45)
"பன் மீன் கூட்டம்" (அகம் 240)
"பனை மீன் வழங்கும் வளை மேய் பரப்பு" (மது 375)

நெடிய கடலைப் புரட்டியெடுத்த வளைந்த மீன்படகுகளைக் கொண்ட பரதவர் நிறைய மீன்களான கொள்ளைப் பொருளைத் தாறுமாறாய்க் கிடக்கும் மணலில் குவித்தனர்.
"நெடும் கடல் அலைத்த கொடும் திமில் பரதவர்

கொழு மீன் கொள்ளை அழி மணல் குவைஇ" (நற் 175)

அன்றாடத் தேவைக்கு மேல் எதை வேட்டை ஆடினாலும் அது"கொள்ளை தான்! தரை ஆயினும் திரை ஆயினும்...

கடலில் பரதவர் மீன்பிடிக்கச் செல்வதை "வேட்டம்" என்று குறிக்கிறது அகநானூறும் நற்றிணையும். வேட்டம் என்பது வேட்டை, வேட்கை. வேட்டையானாலும் வேளாண்மையானாலும் காடு ஆயினும், கடலாயினும்

"பெரு மலை சிலம்பின் வேட்டம் போகிய
செறி மடை அம்பின் வல் வில் கானவன்"(அகம் 282)
"பெரும்கடல் வேட்டம்" (அகம் 140)
"கொடும் திமில் பரதவர் வேட்டம்" (அகம் 140)
"வேட்டம் பொய்யாது வலை வளம் சிறப்ப
பாட்டம் பொய்யாது பரதவர் பகர" (அகம் 140)

மலை வளம் ஆனால் என்ன! வலை வளம் ஆனால் என்ன? வயிற்றின் வயதும் பசியின் வயதும் வேறு வேறா ? அதனால் தான் "தொல் பசி"
என்ற சொல்லாடல் (பெரும். 253; பதி.12)

வானம் வசப்படும் ஏனெனில், நிமிர்ந்தால் வானம்!! ஆனால் கடல் அப்படி அல்ல! கடலைக் காணாதவனின் கால்கள் கனவில் கூட "அலைநீரை' உணர்வதில்லை!

"நெய்தல்" வெறும் திணைநிலம் அல்ல! வாழ்வியல்!
"பாடல் சான்ற நெய்தல் நெடுவழி" (சிறு 151) என்று பாடல் பெற்ற நிலம்!

"நெய்தலங்கானல் நெடியோய்" (புறம் 10) என்று சோழன் இளஞ்சேட் சென்னியைப் போற்றிய தமிழ்!

சுறா வேட்டையை சங்க இலக்கியம் ஓர் ஆற்றல் மிக்க "தொழில்நுட்பமாகவே" சித்தரிக்கிறது!
"கடும் சுறா எறிந்த கொடும் திமில் பரதவர்
வாங்கு விசை தூண்டில் ஊங்கு ஊங்கு ஆகி" (நற்.199)

வாங்கு விசை தூண்டில்! இழுக்கின்ற விசையையுடைய தூண்டில்!
(Fishing rod with a gadget - sort of a mechanical fishing device)

"எறி உளி பொருத ஏமுறு பெருமீன்" (அகம் 210), பரதவர்கள் உளி போன்ற கூர்மையான கருவியை எறிந்து கொன்ற பெருமீன்.

"வல்வினை பரதவர் கூர் உளி கடுவிசை மாட்டலின்" (அகம் 340)

சினைப்பட்ட சுறாவின் கொம்பை நட்டு துடியான குடும்ப தெய்வத்தை வணங்கினார்கள் பரதவர்கள் (பட். 86-90)
"சினை சுறவின் கோடு நட்டு
மனை சேர்த்திய வல் அணங்கு" (பட். 86- 87)

சுறா மீனின் உருவம் பொறிக்கப்பட்ட மோதிரத்தை அணியும் வழக்கம் இருந்தது
"சுறா ஏறு எழுதிய மோதிரம் தொட்டாள்" (கலி.84)

கோவேறுகழுதையின் காலைக் கடித்த சுறா!
"கழி சுறா தாக்கிய புண்தாள் அத்திரி" ( நற் 120)

அத்திரியும் சுறாவும் ஒருவழியில் நடந்த இருங்கழி எது? அத்திரியின் காலை சுறா கடித்தது எந்தக் கடற்கரையில்? தொல்தமிழ் நடந்த இருங்கழித் தடமா?

கடல் மீன் தூங்குமா? "தூங்கும்" என்று சொல்கிறது சங்க இலக்கியம்! இதை ஒரு நெய்தல் திணைப் பாடல் சொன்னால் கூடப் புரிந்து கொள்ளலாம். ஆனால் "கடல் மீனும் தூங்கும் நள்ளிரவு" என்ற சித்திரிப்பு மலைநிலத்துக் குறிஞ்சிப்பாடலில். இதை "திணை மயக்கம்" என்று இலக்கணக் குறிப்பெழுதிக் கடப்பது அல்ல நமது குறிக்கோள்! தொல்தமிழ்ச் சமுதாயம் கடல் பற்றிக் கொண்டிருந்த பரந்த தெளிவைப் புரிந்து போற்றுவது!

"கடல் மீன் துஞ்சும் நள்ளென் யாமம்!" (அகம் 142)
அவள் வந்தாள்! ...ஆற்றுமணலின் குறைவு அறல் அறலாகப் படிந்து கிடப்பது போன்று நெளிநெளியான கூந்தல் அசைய நடந்து வந்தாள். அணிகலன்கள் பூண்டிருந்தாள். கடல் வாழ் மீன்களே உறங்கும் நள்ளிரவில் கண்ணைக் கவரும் ஓவியப் பாவை நடை பயில்வது போல நடந்துவந்தாள். (அகம் 142)

"...குறை அறல் அன்ன இரும் பல் கூந்தல்,
இடனில் சிறு புறத்து இழையொடு துயல்வரக்,
கடல் மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து,
உருவு கிளர் ஏர் வினைப் பொலிந்த பாவை
இயல் கற்றன்ன ஒதுக்கினள் வந்து" (அகம் 142)

"Fish Sleep" என்று கூகிளில் தேடுங்கள்! "மீன் உறக்கம்" உறுதியாக ஓர் ஆய்வுக்களம்! பெரும்பாலான மீன்கள் "ஓய்வெடுக்கும்" போது "வளர்சிதை மாற்ற உடல் நிகழ்வுகள்" (metabolism) குறைகின்றன. ஆபத்து வந்தால் அறியும் அளவுக்கே விழிப்பு நிலை. உள் உடல் செயல்பாடுகள் மறைந்தது போன்ற ஒரு"மயக்க நிலை" (Suspended Animation), சில மீன்கள் மிதக்கின்றன. சில மீன்கள் பவளப்பாறை இடுக்குகள், கடல்தரைச் சேறு தேடி ஒடுங்கிக்கொள்கின்றன!

"கடல் மீன் துஞ்சும் நள்ளென் யாமம்" அடடா தமிழே! இது உனது ஆழ"அழகியலா"! அல்லது கடல்மடியில் இயல்பாக நீ அறிந்த "அறிவியலா!"

பரதவர் சிறுகுடி:
குப்பையாய், குவியலாய், குன்று போல் குவிந்து கிடந்தன உப்பும், மீனும், வெயிலில் உலர்த்தும் கருவாடுகளும், காற்று அடித்துக் குவித்த வெண்மணலும்.

"உப்பின் குப்பை" (அகம் 190)
"உவர்விளை உப்பின் குன்று போல் குப்பை" (நற் 138)
"கானல் இட்ட காவல் குப்பை புலவு மீன் உணங்கல்" (நற் 331)
"குப்பை வெண்மணல்" (ஐங் 181)
ஆனாலும் சங்க இலக்கியம் அந்தச் சிறிய ஊர்களை "குப்பம்" என்று குறிப்பிடவில்லை! மாறாக;
"கானல் அம் சிறுகுடி" (நற் 4)
"பெரும் மீன் கொள்ளும் சிறுகுடி" (நற் 219)
"பெரும் கடல் வேட்டத்து சிறுகுடி" (நற் 140)

என்று கொண்டாடுகிறது!

"இரும் புலா கமழும் சிறுகுடி பாக்கத்து(அகம் 70)
இரும் புலா கமழுமா! அடடா!
"தெருவெல்லாம் மீன் கவிச்சல் தோன்றாத அளவுக்கு தாழை மணம் கமழும் ஊரிலுள்ள கானல் பூங்காவில் அவள்- அவன் காதல் தோன்றியது." (நற்றிணை 203).
"வெண் பூ தாழை...தாது சோர்பு
சிறுகுடி பாக்கத்து மறுகு புலா மறுக்கும்
மணம் கமழ் கானல் இயைந்த நம் கேண்மை." (நற்றிணை 203)

பரதவ மகளிரின் சுயமரியாதை! களவுக்காதல்; இருமனம் ஒன்றான திருமணம். இதுதான், தமிழ் அகவாழ்வியல் மரபின் அடித்தளம்.

அது ஒரு மீனவர் சிறுகுடி! நீலப் பெருங்கடலின் அலைகளைக் கடந்து ஆழ்கடலில் மீன்பிடித்துக் கரை திரும்பும் அவளிடம் மனதைப் பறிகொடுத்த "ராஜா வீட்டுக் கன்னுக்குட்டி" அவன். தேரில் வந்திருக்கிறான். அவனிடம் அந்தப் பரதவர் மகளின்தோழி பேசுகிறாள்.

"நீயோ, கொடி பறக்கும் கடைத்தெரு கொண்ட பழமையான ஊரில் தேரில் விரையும் செல்வனின் காதல் மகன். நாங்களோ, சுறாமீன் துண்டங்களை மணலில் வெயிலில் காயவைத்துக் கொண்டு, அதனைக் கவ்வ வரும் பறவைகளை ஓட்டுகிறோம்! உங்கள் நட்பும் பரிசும் எமக்கு எதற்கு? கருவாட்டு கவிச்சி அடிக்கும் இடம் இது. சற்று விலகியே நிற்கவும்!"

பெருங்கடல் எங்கள் விளைநிலம். எங்களது"சிறுநல்வாழ்க்கை"எளிமையானது. ஆனாலும் எங்களுக்கு இது நல்ல வாழ்க்கை. இது உங்களுக்கு ஒத்துவராது. அதுமட்டுமல்ல; எங்கள் ஊரிலும் பெருமிதம் மிக்க இளைஞர்கள் இருக்கிறார்கள்.

"இவளே கானல் நண்ணிய காமர் சிறுகுடி
நீல் நிற பெரும் கடல் கலங்க உள் புக்கு
மீன் எறி பரதவர் மகளே நீயே
நெடும் கொடி நுடங்கும் நியம மூதூர்
கடும் தேர் செல்வன் காதல் மகனே
நிண சுறா அறுத்த உணக்கல் வேண்டி
இன புள் ஓப்பும் எமக்கு நலன் எவனோ
புலவு நாறுதும் செல நின்றீமோ
பெருநீர் விளையுள் எம் சிறு நல் வாழ்க்கை
நும்மொடு புரைவதோ அன்றே
எம்மனோரில் செம்மலும் உடைத்தே" (நற்றிணை 45)

முன்பின் அறியாத இருவர் காதலில் விழுவது இயல்பான நிகழ்வு. சீராட்டி வளர்க்கப்பட்ட செல்வமகள் காட்டுவழியில் காதலனுடன் 'உடன்போக்கு" செல்லும் காட்சி சங்க இலக்கியங்களில் ஏராளம்! இங்கே, மீனவர் பெண்ணைத் தேடி வந்த "அமுல் பேபி" போன்ற இளைஞனிடம் "இது கதைக்கு உதவாது" என்கிறாள் தோழி!

சிறுகுடி பரதவர் மகிழ்ச்சி:

இரங்கலும் இரங்கல் நிமித்தமும் தான் நெய்தல் திணையின் உரிப்பொருள்! புயல், ஆழிப்பேரலை போன்ற இயற்கைச் சீற்றங்கள், கடல் சார்ந்த வாழ்வியலுக்கே உரித்தான உறுதியின்மையும் அபாயங்களும்.

"இன்னும் கொஞ்ச நேரம் இருந்தா தான் என்ன! ஏன் அவசரம்? என்ன அவசரம்?" என்று காலம் காலமாக ஏங்கித் தவிக்கின்றன நெய்தல் நிலத்துக் காதல் நெஞ்சங்கள்! அதனால் என்ன! இதை எல்லாம் மீறி பரதவர் வாழ்க்கை உழைப்பால் நிரம்பி "மகிழ்ச்சியாகத் தான் இருக்கிறது" என்பது தான் சங்க இலக்கியம்
நமக்குரைக்கும் பாடம்!
வெளியே என்ன இருக்கிறது? நிறைவும் குறைவும் நெஞ்சில் இருக்கிறது!

மேற்கு மலையில் சென்று மறைந்தது மேலை வானத்தில் தொங்கிக்கொண்டிருந்த சூரியன். வெளிச்சத்திற்கும் இருட்டுக்கும் நடுவே மயங்கிய மாலை. கள் குடித்து மகிழ்ந்திருந்தனர் மீனவர்கள். பகலில் கடலில் பிடித்த ஏராளமான மீன்களை போனவிலைக்கு விற்றுவிட்டு நண்டுகள் ஓடித்திரியும் புலால்நாறும் மணல் பரப்பிய முற்றத்தையுடைய தங்களது அழகிய சிறுகுடிக்குச் செல்லும் ஒழுங்குபட்ட வழியில் நடந்து போகிறார்கள்! (நற்றிணை 239)

"ஞான்ற ஞாயிறு குட மலை மறைய
மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்
இனிது பெறு பெரு மீன் எளிதினின் மாறி

அலவன் ஆடிய புலவு மணல் முன்றில்
காமர் சிறுகுடி செல் நெறி..." (நற்றிணை 239)

அந்த நெய்தல் நிலத்துக் கானலில் புன்னை மரங்கள் அதன் அரும்புகள் பனித்துளி போல் உதிர்கின்றன. அங்குள்ள துறையில் மேயும் இப்பிப் பூச்சிகளின் (கிளிஞ்சில்) மேல் அவை உதிர்கின்றன. அதனைச் சிறுகுடியில் வாழும் பரதவ மக்கள் மகிழ்ச்சியோடு கண்டு திளைக்கின்றனர். இதுதான் அந்தக் கானல். (நற். 87)

"...அவர் நாட்டு
பனி அரும்பு உடைந்த பெரும் தாள் புன்னை
துறை மேய் இப்பி ஈர்ம் புறத்து உறைக்கும்
சிறுகுடி பரதவர் மகிழ்ச்சியும்
பெரும் தண் கானலும் ..." (நற். 87)

அடடா தமிழே... "மகிழ்ச்சிக்கான காரணம் வானில் இருந்து குதிப்பதில்லை, நம் அருகே தரையில் தான் இருக்கிறது" என்பதை போகிற போக்கில்
எப்படிச் சொல்லித்தருகிறாய் நீ!

அரியணை, வெண்கொற்றக் குடை, செங்கோல், வீரம், கொடை, வெற்றிமுரசு, செல்வச் செழிப்பு எல்லாம் கிடக்கட்டும் ஒருபுறம். சங்கஇலக்கிய வாழ்வியல் மரபின் உயிர்நாடி காதல் தான்! ஏனெனில், தமிழ் எனில் அகம்!

நெய்தலின் உரிப்பொருள்"இரங்கல்" என்பதால் கடற்கரை முழுவதும் "கண்ணீர் அஞ்சலி" சுவரொட்டி தான் காணக்கிடைக்கும் என்று கற்பனை

செய்யாதீர்கள்! இயற்கையை தூரத்தில் நின்று காட்சிப்பொருளாக பார்க்காமல், வாழ்வின் எதார்த்தம் குறித்த ஆகச்சிறந்த புரிதலுடன், அதன் அனைத்துப் பரிமாணங்களுடனும் உறவாடும் இயல்பான வாழ்வியல் அது.

இதோ "பெயர் தெரியாத" ஒரு புலவர் எழுதிச் சென்ற நெய்தல் திணைக் காட்சியைப் பாருங்கள்! (நற்றிணை 172)

காதல் கடல் கரையோரம். ஒரு புன்னைமர நிழலில் அவள்-அவன். நாணிக்கோணினாள் அவள்.
"இன்னைக்கு என்ன புது வெட்கம்?" என்று கேட்டான்.
அவள் அந்த"ரகசியத்தை" உடைத்தாள். "இந்த புன்னை மரம் என் தங்கை முறை என்று என் அன்னை சொன்னாள்". நான் சிறுவயதில் இந்த இடத்தில் தோழிகளுடன் "காய்மறை" விளையாட்டு விளையாடுவேன். ஒரு நாள் நான் மணலில் புதைத்து எடுக்க மறந்த புன்னை விதை முளைத்துச் செடியானது. பாலையும் நெய்யையும் செடிக்கு ஊற்றினேன். வளர்ந்து மரமாகிவிட்டது. ஒருநாள் எனது அன்னை இந்த
மரத்தைப் பார்த்து மகிழ்ந்து சொன்னாள். "உன்னைவிட அழகான இந்த மரம் உனக்கு தங்கை போன்றது". "தங்கை" அருகில் இருப்பதால் எனக்கு வெட்கம். வேண்டுமென்றால் "நாம் வேறு மரநிழலுக்கு போய்விடலாம்".

"விளையாடு ஆயமொடு வெண் மணல் அழுத்தி,
மறந்தனம் துறந்த காழ் முளை அகைய,
'நெய் பெய் தீம் பால் பெய்து இனிது வளர்ப்ப;

நும்மினும் சிறந்தது; நுவ்வை ஆகும்' என்று,
அன்னை கூறினள், புன்னையது நலனே-
அம்ம! நாணுதும், நும்மொடு நகையே;
விருந்தின் பாணர் விளர் இசை கடுப்ப,
வலம்புரி வான் கோடு நரலும் இலங்கு நீர்த்
துறை கெழு கொண்க!- நீ நல்கின்,
இறைபடு நீழல் பிறவுமார் உளவே. (நற்றிணை 172)

அடடா தமிழே !! "உன்னைவிட அழகான இந்தப் புன்னை மரம் உன் தங்கை" என்ற அன்னையின் மொழியாக, இந்த "அவசர உலகிற்கு" நீ என்ன சொல்ல விரும்புகிறாய் எங்கள் அன்னைத் தமிழே!

நிலமும் பொழுதுமான முதற்பொருள்...
தெய்வமும் உணவும் விலங்கும் மரமும் பூவும் புள்ளும் யாழும் பறையும் உள்ளடங்கிய கருப்பொருள்...
திணை ஒழுக்கமாகிய உரிப்பொருள்...
இன்னொரு இலக்கியம் இப்படி இருந்தால் என்னிடம் தெரிவிக்கவும்!

# அன்பின் ஐந்திணை - நெய்தல்

*– முனைவர் தேமொழி*

கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது நூலில் முதலில் இடம் பெறும் குறிஞ்சித் திணைப்பாடல்களை அடுத்து 'இரங்கலும் இரங்கல் நிமித்தமும்' ஒழுக்கம் குறித்த 31 வெண்பாக்கள் (பாடல்கள் 32 -62) நெய்தல்திணைப் பாடல்களாக இடம் பெறுகின்றன. இப்பாடல்களிலும் நெய்தல் நில இயற்கைக் காட்சிகளும், அம்மக்களின் வாழ்வியலும் அழகுற விவரிக்கப்படுகிறது. நெய்தல் திணையின் முதற்பொருள்(நிலமும் பொழுதும்), கருப்பொருள்(நிலத்தின் தனித்தன்மையைக் குறிப்பன), உரிப்பொருள்( அந்த நில மக்களின் ஒழுக்கமும் வாழ்வு முறையும்) என இம்மூன்று பொருள்களும் பாடல்களில் வழி தெளிவாக அறிந்து கொள்ள முடியும்.

இந்த நெய்தல்திணைப் பாடல்களிலும், சங்கப்பாடல்களில் தோழிக்குத் தனிச் சிறப்புண்டு என்பதற்கு இணங்க, தலைவன் தலைவியை மணந்து (வரைவு) கொள்ளாமல் காலம் தாழ்த்தும் பொழுது தோழி தலைவனிடம் தலைவியை மணந்து கொள்ள வரைவு கடாதல் என்ற நோக்கில் தலைவியைச் சந்திக்க அவன் வரும் இடர் தரும் வழி, ஊரில் அலர் துவக்கம், வரைவு வேட்கை, குறியிடம்

மறுப்பது, பகற்குறி, இரவுக்குறி, அறத்தொடு நிற்றல், ஆற்றுவித்தல், தூது செல்லல் என்றும்; வரைவு மலிதல் உதவிகள் செய்வது என்றும் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே காதல் துவங்கி வளர்ந்து கைகூடுவதில் தோழியின் பங்களிப்பு மிகுதி.

இந்நூலின் நெய்தல் பாடல்களை குறிஞ்சி நிலப் பாடல்களுடன் ஒப்பிடுகையில் தலைவிக்குக் காவல் மிகுதி, இற்செறிப்பு, வெறியாட்டு ஏற்பாடு, உடன்போக்கு போன்ற குறிஞ்சிப் பாடல்களில் காணப்பட்ட கருத்தாக்கங்களை நெய்தல் பாடல்களில் காண இயலவில்லை. ஊர் மக்களின் அலர், அதனை தவிர்க்க பகலில் சந்தித்த காதலர்கள் இரவில் சந்திக்க முற்படுதல், இருப்பினும் அலர் தொடர்தல், அதனால் தோழி தலைவனிடம் இரவிலும் வரவேண்டாம் என்று கூறி தலைவியை மணக்க ஏற்பாடு செய்யச் சொல்லல் என்ற பாடல்களே மிகுதி. 'கனை இருள் வாரல்!' என்ற கருத்தைத் தொடர்ந்து பல பாடல்களில் தோழி தலைவனிடம் கூறிக்கொண்டே இருக்கிறாள்.

தோழி இடம் பெறாத பாடல்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைவு. தோழி வரைவு கடாயது என்பது 13 பாடல்களில் (பாடல்கள்: 34, 35, 36, 37, 43, 46, 50, 52, 53, 54, 55, 57, 59) காட்டப்படுகிறது. அதாவது மொத்த நெய்தல் பாடல் எண்ணிக்கையைக் கணக்கில் கொண்டால், 40 விழுக்காட்டுப் பாடல்கள் இந்த வகையில் அமைந்துள்ளன. தலைவன், தலைவி, தோழன், தோழி, செவிலித்தாய் ஆகியோர் மட்டுமே

பாடல்களில் நேரடியாக இடம் பெறுகிறார்கள். தலைவியின் தந்தை, தமையன் மார் போன்றவர் குறித்து குறிப்புகள் மட்டுமே காட்டப்படுகின்றது. செவிலித்தாயும் இரு பாடல்களில் மட்டுமே காட்டப்படுகிறாள். குறிஞ்சி நிலத் தலைவியைவிட நெய்தல் தலைவி கட்டுப்பாடுகள் அதிகம் இன்றி இருக்கிறாள். தலைவியைச் சந்திக்க இயலாத தலைவன் அதைக் கடற்கரை நண்டிடம் கூறிப் புலம்புவதும், தலைவனைச் சந்திக்க இயலாத தலைவி அதைக் கடல் அலைகளிடம் சொல்லிப் புலம்புவதும் என இரு பாடல்கள் காட்சியில் சிறப்பு மிக்கப் பாடல்களாக அமைந்துள்ளன.

திணைமாலை நூற்றைம்பது நூலின் நெய்தல் திணைப் பாடல்கள் அனைத்திலும் குறிப்பிடப்படும் தலைவனும் தலைவியும் ஒருவரே என்றோ, அவர்களின் தோழியும் தோழனும், செவிலித்தாயும், தந்தையும் தமையன்களும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர் என்றோ, அல்லது அவர்கள் வாழிடம் குறிப்பிட்ட நெய்தல் நில ஊர் என்றோ கூறுதலும் இயலாது. இருப்பினும், 31 நெய்தல் பாடல்களையும் ஒரே தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே நிகழும் காதலாகக் கொண்டு ஒரு வரிசைப்படுத்தி அவற்றிலிருந்து ஒரு கதையும் உருவாக்கலாம். அத்தகைய முயற்சியே இக்கட்டுரை. வரிகளுக்குப் பின்னர் அடைப்புக் குறிகளுக்குள் கொடுக்கப்படும் எண், திணைமாலை நூற்றைம்பது நூலில் உள்ள பாடல்களின் வரிசை எண்.

இரங்கலும் இரங்கல் நிமித்தமுமாகிய ஒழுக்கமும் கொண்ட நெய்தல் நிலத்தில், கடற்கரையோரப் பகுதியில் நிகழ்வது இக்கதை.

அது ஓர் அழகிய நெய்தல் நிலம். குளிர்ந்த கடல் நீரும் அதில் தொடர்ந்து ஒரு அலை வந்து கரையில் மோதித் திரும்பும் முன்னர் மேலும் இரு அலைகள் அதை விரட்டிவந்து மோதிச் செல்லும் வளப்பம் நிறைந்த கடற்கரை. பகலிலும் இரவிலும் மக்கள் கடற்பகுதியில் அலைந்து அலைகளுக்குப் போட்டியாக ஆரவாரித்துக் கொண்டு நடமாடியவண்ணம் உள்ளார்கள். அலைகளால் அள்ளி வரப்பட்டு கடற்கரையில் ஒதுக்கப்பட்ட சிப்பிகள் வாய்பிளந்து காட்டுவதால் வெளிப்படும் முத்துக்களின் ஒளி இரவில் இருளையும் விரட்டக் கூடியதாக இருக்கிறது. அவற்றை அள்ளிச் செல்ல விரும்பும் மக்களின் நடமாட்டத்தை இரவிலும் காணக்கூடியதாக உள்ளது.

கடற்கரையில் உப்பங்கழிகளும் அவற்றைச் சுற்றி சூழ்ந்துள்ள கடற்கரையின் பசுமை நிறைந்த கானல் சோலைகளும், நீல நிறக் கடலும் இவற்றுக்கு மாற்றாக மிக வெண்மையான மணல் நிரம்பிய கடற்கரை மணலும் கண்ணைக் கவரும் வண்ணம் உள்ளது. உப்பங்கழிகளில் சுறாமீன்கள் சுழன்று விளையாடி நீந்தியவண்ணம் உள்ளன. கடற்கரை எங்கும் அன்று பூத்த மலர்களுடன் மணம் மிக்க புன்னை மரங்களும், ஞாழல் மரங்களும், நெருக்கமாக அடர்ந்து வளர்ந்த தாழை மரங்களும்,

உயர்ந்து வளர்ந்த பனை மரங்களும் உப்பங்கழிகளைச் சுற்றி அடர்ந்த தில்லை மரங்களும் நீர் முள்ளிச் செடிகளும் வளர்ந்துள்ளது. கடற்பகுதியில் வீசும் புலால் நாற்றத்தைப் புன்னை மரத்தின் மலர்களின் இனிய நறுமணம் நீக்கிக் கொண்டிருக்கிறது. எங்கும் நெய்தல் மலர்கள் பூத்துள்ளன. அங்கு மீட்டாமலே மேன்மையான இசையை தேன்வண்டுகள் பொழிந்த வண்ணம் உள்ளன.

அவ்வூரின் நுளையர் குடும்பத்தில் அண்ணன்களும் ஓர் தங்கையும் எனச் சிறு குடும்பம் உள்ளது. அந்த அண்ணன் மார் படகு செலுத்தி, நுட்பமாகப் பின்னிய வலையை வீசி மீன் பிடிக்கும் தொழிலில் மிக வல்லவர்கள். அவர்கள் ஆழ்கடலில் அமிழ்ந்து முத்துக்களும் சங்குகளும் கூட பிடித்து வருவார்கள். அவர்கள் அவ்வாறு வலை வீசி கடலில் இருந்து முகந்து வரும் மீன்களை வெய்யிலில் கருவாடாக உலர வைத்து, அவற்றைப் பறவைகள் கொத்திப் போகாமல் காவல் காப்பது தங்கையின் வேலை. இவளே இக்கதையின் தலைவி. இவள் வேலை ஒத்திருக்கும் மிகப் பெரிய நீண்ட கண்களையும், மருண்ட பார்வையையும், காதில் சிறிய சுறாமீன்கள் வடிவில் வார்க்கப்பட்ட மகரக்குழை காதணிகளையும், கையில் முத்துக்கள் பதித்த வளையல்களையும் அணிந்திருக்கிறாள். ஆகவே அவளை நாம் முத்தழகி என்றும் பெயர் சூட்டி அழைக்கலாம்.

தலைவியின் அண்ணன்கள் வலைவீசி மீன் பிடிக்கக் கடலுக்குச் சென்று விட்டார்கள். கடற்கரை சோலைப் பகுதியில் மீன்கள் உலர்த்தப் பட்டுள்ளன. அருகில் அடப்பங் கொடிகளில் முளைப்பாலிகையினைப் போல ஒன்றாகக் கூடி மலர்கள் பூத்திருக்கின்றன. அவற்றின் மீது உடலில் இருந்து நீக்கிய கவசம் போல மீன் வலைகள் வெய்யிலில் உலர்த்தப் பட்டிருக்கின்றன. அப்பகுதியில் தலைவியும் அவளது இணைபிரியாத தோழியும் கருவாடுகளை உலர்த்தி அவற்றைக் காவல் காத்த வண்ணமும், அவற்றை வாங்க விரும்புவோருக்கு விலை கூறி விற்றவாறும் பகல் பொழுதை ஓட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

அந்த கடற்கரை ஊரின் தலைவனின் படகுக் கூட்டம் கரையை நோக்கி வருகிறது. அமைதி என்பதையே அறியாத மன்னவன் ஒருவனின் படை ஒன்று போருக்குச் செல்லுகையில் எவ்வளவு ஆரவாரம் இருக்குமோ அது போல ஆரவாரம் கடற்கரைப் பகுதியில் ஏற்படுகிறது. அலை ஓசை போரின் பறை ஓசை போல முழங்க , அலைகள் யானைப் பாகனாகவும், நீண்ட தோணிகள் யானைப் படைகள் போலத் தோற்றமளிக்க, வானில் சுற்றும் பருந்துகள் புரவிகள் போல விரைந்து பின் தொடர, அந்த ஓசையில் அச்சமுற்ற கடற்கரையினை அடுத்துள்ள சோலையில் ஆர்த்தெழும் பறவைகள் ஒருசேர அலறலுடன் வானில் எழும்பிட படைவீரர்களுடன் மன்னன் போருக்குச் செல்லும் காட்சி போல இருக்கிறது அது. அந்தத் தலைவனின் தோற்றத்தால் கவரப்படுகிறாள் தலைவி.

அவள் பார்வை கருவாடுகளைக் காவல் செய்வதை விட்டு அவன் செல்லும் இடமெல்லாம் தொடர்ந்து அவனையே காவல் செய்யத் துவங்குகிறது. தலைவியின் அழகைக் கண்டு மயங்கிய தலைவனும் அவள் பார்வை தன்னை சிறைபிடிப்பதை உணர்கிறான். அன்று பூத்த ஞாழல் மலர்களைக் கொத்தாகப் பறித்து தலைவியின் கையில் திணிக்கிறான். இவர்களின் செயல்களை தோழியும் நோட்டமிட்டவாறே எதையும் அறியாதவள் போல உடன் இருக்கிறாள்.

தனது இடத்திற்குத் திரும்பிய தலைவன் தலைவியின் கவர்ந்திழுக்கும் பார்வை தவிர வேறொரு சிந்தனையும் இன்றி அதில் மூழ்கியிருக்கிறான். தலைவனிடம் கண்ட மாறுதலை உணர்ந்து தோழன் அவனிடம் பேச்சு கொடுக்கிறான்.

கடற்கரையில் மீன் உலர்த்திக் காவல் காக்கும் தலைவியின் கண்கள் என்மீது பாய்ந்து என்னையே வட்டமிட்டு என்னை அவளது காவலுக்குள் வைத்தது என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான் (32). அவளது வெண் முத்துப்பற்கள் சிந்தும் புன்முறுவலைக் காணுகையில் மனம் துவண்டு வருந்துகிறேன் என்கிறான் (33). தலைவியின் ஒரே பார்வையில் கவிழ்ந்துவிட்ட தலைவன் ஒரு பண்பாளனா என்ற எண்ணம் தோழனின் மனதில் தோன்றுகிறது.

அவனது மனதின் எண்ணத்தைப் புரிந்து கொண்ட தலைவன் தலைவி குறித்து மேலும் அடையாளம் கூறி அவனையே சென்று பார்த்துக் கொள்ளச் சொல்கிறான். கடல் அலைகள் ஆர்ப்பரித்துத் திரும்பிச் சென்ற வண்ணம் அலைமோதும் கரையினிடத்தே, கரையில் அலையும் நண்டுகளைக் கால்களினாலே கண்டு பிடித்தவாறு, கரை அருகே மலர்ந்துள்ள நெய்தற் பூக்களைக் கொய்தவாறு நிற்கும், மிக நீண்ட கண்களை உடையவள் எனக்குக் காதல் மயக்கத்தை உண்டாக்கியவள். அவள் அந்த பரதவரின் மகளாகிய என் தலைவி (60) என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான். தலைவனைக் கவர்ந்தவளைத்தான் பார்த்துவிடுவோமே என்ற எண்ணத்தில் தலைவன் குறிப்பிட்ட அடையாளங்கள் உதவியுடன் கடற்கரைக்கு வந்து அவளைக் கண்டு வியக்கிறான் தோழன்.

ஒப்புமை கூற இயலாத இத்தகைய சிறந்த அழகியான தலைவியைக் கண்ட பிறகும், இணையற்ற அவளது இரு பெரிய கண்களைப் பார்த்த பின்னரும் கூட அவளை விட்டு தனது உறவுகளை நாடி தனது இடத்திற்குத் திரும்பிய தலைவன் மன உறுதி கொண்டவன் மட்டுமல்ல பண்பில் சிறந்தவன்தான் (45) என்று தோழன் மனதில் எண்ணம் ஏற்படுகிறது. மீண்டும் தலைவனிடம் செல்கிறான்.

ஒரு பொருட்டாக அக்கறை செலுத்தாதவர்களும் கூட காண நேர்ந்தால் இயற்கையழகு நிறைந்த

தெய்வமாகக் காட்சி அளிக்கக் கூடியவள் தலைவி. அத்தகையவளை கருத்தாகக் காக்கும் எண்ணத்தைக் கைவிட்டு, அழகிய கடற்கரைச் சோலையினிலே ஓர் அணங்கு போலத் தோற்றமளிக்கும் தலைவியை அவர் குடும்பத்தார் பிறர் துன்புறுவாரே என்ற கருத்தின்றி கட்டவிழ்த்து விட்டுள்ளார்கள் என்று தோழன் தலைவனிடம் தலைவியின் சிறப்பைப் பாராட்டிக் கூறுகிறான் (47).

மீண்டும் தலைவியைக் காண விரும்பி கடற்கரை பக்கம் புரவி பூட்டிய தனது தேரில் செல்கிறான் தலைவன், அங்கு தோழியைக் காணுகிறான். தான் தலைவியைச் சந்திக்க விரும்புவதைக் கூறுகிறான். தலைவியின் செவ்வாயின் முத்துப்பற்கள் முன்னர், அவளது கைவளையில் பதிக்கப்பட்டிருக்கும் உண்மையான முத்துக்கள் போட்டிப் போட இயலாமல் தோற்கும் எனத் தலைவன் தலைவியின் அழகைப் போற்றுகிறான் (42).

அவர்களது காதல் நாடகத்தை முன்னர் பார்த்துக் கொண்டிருந்த தோழிக்குத் தலைவன் தலைவிக்கு ஏற்றவன்தான் என்ற எண்ணம் வருகிறது. அவனுக்கு உதவ முன் வருகிறாள். தலைவனே, உயர்ந்த தாழை மரங்களும் ஞாழல் மரங்களும் அடர்ந்த சோலை தலைவி விளையாடும் இடம், அங்கு அவளைச் சந்திக்க வாய்ப்புள்ளது (44, 58). அங்கு இல்லாவிடில், கடற்கரைக் கானல் அருகில் கருவாடுகளை உலர்த்திக் காயவைத்துக் காவல் காத்துக்கொண்டிருக்கும் தலைவியை

பகற்பொழுதில் அங்கு காணலாம் எனத் தோழி தலைவனுக்குக் குறிப்பு கொடுக்கிறாள் (51).

தலைவனும் தலைவியும் சந்திக்கத் துவங்குகிறார்கள். நாட்கள் கடக்கின்றன. தலைவன் தலைவியைப் பார்க்க வந்து செல்வது பிறர் கவனத்திற்கு உள்ளாகிறது. ஊரில் அலர் எழுகிறது. நம் மீது கூறப்படும் அலர் வளர்ந்து, மழைமேகம் மூளுவது போல எங்கும் சூழ்ந்து மின்னல் இடியுடன் பொழிவது போல, பலநாளாக என்னை வருத்துகிறது என்று தலைவி தனது ஆற்றாமையைத் தோழியிடம் வெளிப்படுத்துகிறாள் (41). இதனால் அவர்கள் சந்திக்க இயலாத நிலை ஏற்படுகிறது.

கடற்கரைக்குச் செல்லும் தோழி அங்கு தலைவனைச் சந்திக்கிறாள், தலைவி இனி வரமாட்டாள் என்று சொல்கிறாள். நிலையைப் புரிந்து கொள்ளும் தலைவன் தோழியை நோக்கியவாறு, கடற்கரையில் விளையாடும் நண்டிடம் பேசுவது போல, துணையுடன் கூடிக்களிக்கும் நண்டே, எனது பிரிவுத்துயரை உன்னிடம் சொல்லி என்ன பயன் என மனம் வெதும்புகிறான். தோழிக்கு அவனது நிலை காண்பதற்கு மிகவும் இரங்கத் தக்கதாக இருக்கிறது. அதை அவள் தலைவியிடம் வந்து தெரிவிக்கிறாள். தனது பெண் துணையோடு இன்புற்று விளையாடும் ஆண் நண்டினையும், என்னையும் தலைவன் பார்த்து, என் இனிய துணைவியாகிய தலைவியோடு இவ்வாறு கூடிக் களிக்க எனக்கும் வாய்ப்பு கிடைக்குமோ? என்று தனக்குத் தானே பேசிக்

கொண்ட தலைவன்; அந்த ஆண் நண்டினை நோக்கி நீ உனது இனிய துணையாகிய பெட்டை நண்டுடன் இன்புற்று விளையாடுதலாகிய ஒன்றையே செய்திருப்பாயானால் பிரிவுத்துன்பம் என்ன என்பதனை அறிந்திருக்கமாட்டாய், என் பிரிவுத்துயரை உன்னிடம் கூறுவதால் என்ன பயன்? என நண்டிடம் பேசுவது போலத் தலைவன் தனது கருத்தை எனது கவனத்திற்கு சொல்லிவிட்டுப் புரிந்து கொண்டவனாய் மனம் வெறுத்து விலகிச் சென்றுவிட்டான் (40) என்று தோழி தலைவியிடம் கூறுகிறாள் .

தலைவனின் நினைவால் தலைவியும் இரவில் உறக்கமின்றி புலம்புகிறாள். என்னைப் போல உறக்கம் வாராது நீ ஏன் அலைமோதுகிறாய். நான் படும் துன்பத்தைப் போன்ற இந்த உறங்கா நிலையாகிய துன்பத்தை உனக்குக் கொடுத்தவர் யாரென்று சொல்வாயாக என்று தலைவி கடலை நோக்கிக் கேட்கிறாள் (38).

இவர்கள் படும் துன்பத்தைக் காணச் சகிக்க முடியாமல் தோழி இரவில் அவர்கள் சந்திக்க ஏற்பாடு செய்கிறாள். தலைவனைக் கண்டு, தலைவனே இரவில் நீ தலைவியைக் காண வருவாயானால் உன் நினைவால் கலங்கி இருக்கும் அவளது கண்களைக் காண இயலும் (34). கடற்கரையில் உள்ள புன்னைமரச் சோலையில், அன்றில் பறவைகள் பாடும் உயர்ந்த பனைமரத்தைக் கொண்ட வீட்டின் முற்றத்தின்

மணல் பரப்பில் இரவில் தலைவியைச் சந்திக்கலாம் எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள் (56).

தலைவனும் வருகிறான், இரவில் அவர்கள் சந்திக்கிறார்கள். தலைவன் இரவில் வருகையில் அவனது புரவியின் குளம்புத் தடயம் மணலில் அழுந்தி அவன் வந்து சென்றதை அறிவிக்கிறது. தலைவியினை இரவினில் காணவருவதைப் பிறர் காணநேரிட்டால் அலர் உண்டாகும் என்று அவன் இனி இரவிலும் வந்து தலைவியைக் காண வேண்டாம் என்று தோழி கூறுகிறாள் (48). பகற் பொழுதில் நீ வந்தாய் எனில் பழிச் சொற்கள் பல வரும். அப்பழிச்சொற்களைத் தவிர்க்க விரும்பி இரவில் நீ வந்தாய் என்றால் வருவதற்கு இடையூறுகளும் பல உண்டு (59). அலர் தவிர்க்க விரும்புவாயானால் இரவிலும் மக்கள் நடமாட்டம் உள்ள பட்டினத்தில் இரவில் தலைவியைக் காண வர வேண்டாம் (49). உனது செய்கையால் ஊரில் அலர் மிகுவதால் அவள் மிகுந்த துயருடன் கண்ணீர் சிந்தியவாறு இருக்கிறாள். நீ வந்தாயானால் அவள் உயிர் துறப்பாள் (55). இரவில் நீ தலைவியைச் சந்திக்க வரும் வழி இடர்கள் மிக்க வழி, அதன் வழி வருவது துன்பம் தரும், உமக்கு ஒன்று நேருமாயின் தலைவி உயிர் வாழமாட்டாள். ஆகவே நீ தலைவியைப் பார்க்க வர வேண்டாம் (61) என்று தலைவனிடம் தோழி கூறுகிறாள்.

தலைவி மீது ஊரார் அலர் தூற்றாதவாறு இருக்க நீ இரவும் பகலும் தலைவியைக் காண விரும்பி

இப்பக்கம் வரவேண்டாம் (35). இனி வருவாய் என்றால் தலைவியை மணமுடிக்க ஓர் நாள் குறித்து வந்து அவளை மணந்து கொள்ளுதலே நீ அவளுக்குச் செய்யும் நன்மையாக இருக்கும் (43). தலைவிக்குத் துன்பம் நீங்குமாறு நீ அளித்த வாக்குறுதிக்குக் கடல் சான்றாக உள்ளது. அவளை ஊரார் அலர் தூற்றாதவாறு மணம் செய்து கொள்வாயாக (36, 37). தலைவனே என் உதவியுடன் நீ இனி தலைவியைச் சந்திக்கத் தேவையில்லை, அவளை மணமுடித்து உன்னவள் ஆக்கிக் கொள் (57). தூக்கக் கலக்கத்தில் கண்ட கனவு போன்று விளங்கிக் கொள்ள முடியாத, வகையில் வருகின்ற உனது வரவை நிறுத்திவிடு தலைவனே. முறைப்படி தலைவியை மணமுடித்து உனது துணையாக்கிக் கொள்வதே உனது தகுதிக்குப் பொருத்தமான செய்கை (50 ). களவுப் புணர்ச்சியில் மிகுந்த விருப்பம் கொள்ளாமல் தக்க நாளொன்றினை தேர்வு செய்து தலைவியை மணம் புரிந்து கொள்வதுதான் உனக்கேற்ற நன்னெறியாகும் (52). எமது சுற்றத்தாரிடம் சென்று ஒப்புதல் பெற்று தலைவியை மணமுடித்து அவளுடன் வாழ்வாயாக (53). இது குறித்து எண்ணி ஆய்வு செய்து காலத்தை வீணாக்க வேண்டாம், தக்க நாள் ஒன்றைத் தேர்வு செய்து, காலம் தாழத்தாது பெண் கேட்டு வந்தால், நீ தலைவியைத் துணையாக அடையும் வாய்ப்பு உமக்குக் கிட்டும் (46). ஆகவே மேலும் ஆராய்ந்து கொண்டிராதே, கோள்கள் குறித்து ஆராய்தல் தேவையில்லை. நிமித்தம் அறியும் கணிஞரை வரவழைத்து, ஓர் மண நாளைக் குறித்துக் கொண்டு வந்து, இவளை விரும்பி மணம் புரிந்து

கொள்ளுதலே நீ தலைவிக்குச் செய்யும் நன்மையாக அமையும் (54) என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.

தலைவியைப் பெண்கேட்டு அயலார் சிலர் வருகிறார்கள். தோழி இனி அமைதியாய் இருப்பது சரியல்லவென்று செவிலித்தாயிடம் தலைவியின் காதல் குறித்து தெரிவிக்கிறாள். கடற்கரைச் சோலையில் தலைவிக்கு ஞாழல் பூவினை தந்து சென்ற தலைவனே தலைவியின் மென்தோள்களை அடையத் தகுதி உடையவன், அவளை மணக்க விருப்பம் தெரிவித்து வரும் மற்ற அயலவர் அல்ல (39). விற்போரில் வல்ல வீரர்கள் கூடி நடத்தும் வில்விழாக் கூட்டத்திலும், கடலினாலே சூழப் பெற்ற இவ்வுலகத்தினிடத்தே நல்லவர் பலர் கூடி நடத்தும் மணவிழாக் கூட்டத்திலும், அன்று கடற்கரையினிடத்து தலைவிக்கு ஒப்பற்ற உதவியினைச் செய்த கடல் துறை முகத்துக்குரியவனை ஒத்த ஆடவரை நாங்கள் காணவில்லை!! இவரைப் போன்ற அத்தகைய சிறந்தவர் சுவர்க்கத்திலிருந்தாலும் அவரை தலைவிக்குத் தேர்வு செய்து மணமுடிப்பாயாக நல்ல எமது அன்னையே! நம் தலைவிக்கு இவனே பொருத்தமான மணமகன் என்பதால், அவன் போலச் சிறந்தவர் கிடைப்பவர் அரிது என்று செவிலிக்குத் தோழி அறத்தொடு கூறி நிற்கிறாள் தோழி (62).

*****

**குறிப்பு** - கதையாகக் கோர்க்கப்பட்ட பாடல்களின் வரிசை, பாடல் எண்களுடன் கொடுக்கப்பட்டுள்ளது:

32. கடற்கரையில் மீன் உலர்த்திக் காவல் காக்கும் தலைவியின் கண்கள் என்மீது பாய்ந்து என்னையே வட்டமிட்டு என்னை அவளது காவலுக்குள் வைத்தது என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான்.

33. தலைவியின் வெண் முத்துப் பற்கள் சிந்தும் புன்முறுவலைக் காணுகையில் மனம் துவண்டு வருந்துகிறேன் நான் என்று தலைவன் தோழனிடம் கூறுகிறான்.

60. கடற்கரையில் நண்டு பிடித்தவாறு நெய்தல் பூக்களைக் கொய்து கொண்டிருக்கும் நீண்ட கண்களையுடைய தலைவி எனக்குக் காதல் மயக்கம் தந்தாள் என்று தோழனிடம் கூறுகிறான் தலைவன்.

45. ஒப்புமை கூற இயலாத இத்தகைய சிறந்த அழகியான தலைவியைக் கண்ட பிறகும் அவளை விட்டு தனது உறவுகளை நாடி தனது இடத்திற்குத் திரும்பிய தலைவன் பண்பில் சிறந்தவன்தான் என்று தோழன் வியக்கிறான்.

47. அழகிய கடற்கரைச் சோலையினிலே ஓர் அணங்கு போலத் தோற்றமளிக்கும் தலைவியை அவர் குடும்பத்தார் பிறர் துன்புறுவாரே என்ற கருத்தின்றி கட்டவிழ்த்து விட்டுள்ளார்கள் என்று தோழன் தலைவனிடம் தலைவியின் சிறப்பைப் பாராட்டிக் கூறுகிறான்.

42. தலைவியின் செவ்வாயின் முத்துப்பற்கள் முன்னர், அவளது கைவளையில் பதிக்கப்பட்டிருக்கும் உண்மையான முத்துக்கள்

போட்டிப் போட இயலாமல் தோற்கும் எனத் தலைவன் தலைவியின் அழகைப் போற்றுகிறான்.

44. தலைவனே உயர்ந்த தாழை மரங்களும் ஞாழல் மரங்களும் அடர்ந்த சோலை தலைவி விளையாடும் இடம், அங்கு அவளைச் சந்திக்க வாய்ப்புள்ளது எனத் தோழி குறிப்பு கொடுக்கிறாள்.

58. அலைகடலும் அதனருகே கடற்கரைச் சோலையும், வெண் மணலும் ஞாழலும், தாழையும் புன்னையும் நிரம்பிய இடங்களை விரும்பிப் பார்ப்பாயாக எனத் தோழி தலைவனுக்குப் பகற்குறி சொன்னாள்.

51. கடற்கரைக் கானல் அருகில் கருவாடுகளை உலர்த்திக் காயவைத்துக் காவல் காத்துக்கொண்டிருக்கும் தலைவியைப் பகற்பொழுதில் அங்கு காணலாம் எனத் தோழி தலைவனுக்கு குறிப்பு கொடுக்கிறாள்.

41. நம் மீது கூறப்படும் அலர் வளர்ந்து, மழைமேகம் மூளுவது போல எங்கும் சூழ்ந்து மின்னல் இடியுடன் பொழிவது போல, பலநாளாக வருத்துகிறது என்று தலைவி தனது ஆற்றாமையை வெளிப்படுத்துகிறாள்.

40. துணையுடன் கூடிக்களிக்கும் நண்டே, எனது பிரிவுத்துயரை உன்னிடம் சொல்லி என்ன பயன் என மனம் வெதும்புகிறான் தலைவன்.

38. தலைவனின் நினைவால் உறக்கமின்றித் தவிக்கும் என் நிலையைப் போல உறங்காமல் அலைமோதும் இத்துன்பத்தை உனக்குக் கொடுத்தவர் யார் கடலே? என்று தலைவி கடலினை நோக்கிக் கேட்கிறாள்.

34. தலைவனே இரவில் நீ தலைவியைக் காண வருவாயானால் உன் நினைவால் கலங்கி இருக்கும் அவளது கண்களைக் காண இயலும் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.

56. தலைவனே கடற்கரையில் உள்ள புன்னைமரச் சோலையில், அன்றில் பறவைகள் பாடும் உயர்ந்த பனைமரத்தைக் கொண்ட வீட்டின் முற்றத்தின் மணல் பரப்பில் இரவில் தலைவியைச் சந்திக்கலாம் எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள்.

48. தலைவியினை இரவினில் காணவருவதைப் பிறர் காணநேரிட்டால் அலர் உண்டாகும் என்று தலைவனை இரவில் வர வேண்டாம் என்று தோழி அறிவுறுத்துகிறாள்.

59. பகல் இரவு என்று இரு பொழுதுகளும் தலைவியைச் சந்திக்க வருதலை விடுத்து விரைவில் அவளை மணமுடித்துக் கொள் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.

49. அலர் தவிர்க்க விரும்புவாயானால் இரவிலும் மக்கள் நடமாட்டம் உள்ள பட்டினத்தில் இரவில் தலைவியைக் காண வருதல் ஏற்புடையதல்ல எனத் தோழி தலைமகனிடம் மறுத்துரைக்கிறாள்

55. தலைவனே தலைவியைப் பார்க்க வரவேண்டாம், உனது செய்கையால் ஊரில் அலர் மிகுவதால் அவள் மிகுந்த துயருடன் கண்ணீர் சிந்தியவாறு இருப்பதைக் காண்பாயாக. நீ வந்தாயானால் அவள் உயிர் துறப்பாள் என்று தலைவனிடம் இரவு வருகையை நிறுத்தச் சொல்கிறாள் தோழி.

61. இரவில் நீ தலைவியைச் சந்திக்க வரும் வழி இடர்கள் மிக்க வழி, அதன் வழி வருவது துன்பம்

தரும், ஆகவே நீ தலைவியைப் பார்க்க வர வேண்டாம் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.
35. தலைவி மீது ஊரார் அலர் தூற்றாதவாறு இருக்க நீ இரவும் பகலும் தலைவியைக் காண விரும்பி இப்பக்கம் வரவேண்டாம் என்று தலைமகனிடம் தோழி கூறுகிறாள்.
43. தலைவனே இரவில் தலைவியைத் தேடி வாராதே, வந்ததால் அவளை மணமுடிக்கும் நோக்கில் மட்டும் வருவாயாக (கனை இருள் வாரல்!) என்கிறாள் தோழி.
36. உன் நாட்டுப் பறவைகளும் குடியும் குடித்தனமுமாக வாழ முற்படுகையில், அது போல நீயும் தலைவியை மணந்து அவளுடன் தங்கிவிடுவாயாக எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள்.
37. தலைவிக்குத் துன்பம் நீங்குமாறு நீ அளித்த வாக்குறுதிக்குக் கடல் சான்றாக உள்ளது. அவளை ஊரார் அலர் தூற்றாதவாறு மணம் செய்து கொள்வாயாக என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.
57. தலைவனே என் உதவியுடன் நீ இனி தலைவியைச் சந்திக்கத் தேவையில்லை, அவளை மணமுடித்து உன்னவள் ஆக்கிக் கொள் என்கிறாள் தோழி.
50. இரவில் வருவதை நிறுத்தி முறைப்படி தலைவியை மணமுடித்து உனது துணையாக்கிக் கொள்வதே உனது தகுதிக்குப் பொருத்தமான செய்கை என்று தோழி தலைவனுக்கு அறிவுறுத்துகிறாள்.
52. நாள் கடத்தாது, தக்க நாள் ஒன்றில் தலைவியை மணமுடித்து இல்லறம் மேற்கொள்வதே உன்

தகுதிக்கேற்ற நல்லொழுக்கம் எனத் தோழி தலைவனுக்கு உரைக்கிறாள்.

53. தலைவனே எமது சுற்றத்தாரிடம் சென்று ஒப்புதல் பெற்று தலைவியை மணமுடித்து அவளுடன் வாழ்வாயாக என்று தோழி தலைவனுக்குக் கூறுகிறாள்.

46. தலைவியைப் பெண்கேட்டு வந்து விரைவில் மணம் முடிப்பாய் தலைவனே, அதை விட்டு இடர் நிறைந்த இரவில் அவளைக் காண வருவதைத் தவிர்ப்பாயாக என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.

54. தலைவனே இரவில் வாராதே, இனி வருவாய் என்றால் தலைவியை மணமுடிக்க ஓர் நாள் குறித்து வந்து அவளை மணந்து கொள்ளுதலே நீ அவளுக்குச் செய்யும் நன்மையாக இருக்கும் எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள்.

39. கடற்கரைச் சோலையில் தலைவிக்கு ஞாழல் பூவினை தந்து சென்ற தலைவனே தலைவியின் மென்தோள்களை அடையத் தகுதி உடையவர், அவளை மணக்க விருப்பம் தெரிவித்து வரும் மற்ற அயலவர் அல்ல என்று தோழி செவிலித் தாயிடம் தலைவியின் காதல் குறித்துத் தெரிவிக்கிறாள்.

62. தலைவிக்கு இவனே பொருத்தமான மணமகன் என்பதால், அவன் போலச் சிறந்தவர் கிடைப்பவர் அரிது என்று செவிலிக்குத் தோழி அறத்தொடு கூறி நின்றாள்.

*****

**உதவிய தளங்கள்:**

1. கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது
மூலமும் உரையும் - மகாவித்வான் ரா. ராகவையங்கார்
செந்தமிழ்ப் பிரசுரம், 1927 (இரண்டாம் பதிப்பு)
https://upload.wikimedia.org/wikipedia/commons/4/4e/திணைமாலை_நூற்றைம்பது.pdf
https://ta.wikisource.org/s/31hg

2. கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது
விளக்க உரை - தமிழ்ப் புலவர் திரு. அ. நடராச பிள்ளை
http://www.tamilvu.org/library/l2F00/html/l2F00ind.htm
http://www.tamilvu.org/library/l2F00/html/l2F00vur.htm

3. கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது
உரையாசிரியர்: பால சங்கரன், எம்.ஏ., பி.எட்.
https://www.chennailibrary.com/pathinenkeelkanakku/thinaimaalai150.html

4. திணைமாலை நூற்றைம்பது - கணிமேதாவியார்
தமிழ் இலக்கியத் தொடரடைவு,
முனைவர்.ப.பாண்டியராஜா
http://tamilconcordance.in/TABLE-THINAIMALAI150-TEXT.html

*****

# அடிமைப்படுத்தும் குலதெய்வங்கள்: நூல் திறனாய்வு

— *முனைவர் க. சுபாஷிணி*

இங்கு ஜெர்மனியில் எனது இல்ல நூலகத்தில் இருக்கும் ஒரு நூல் இது. சிறிய நூல் தான் என்றாலும் இந்த நூலின் தலைப்பும் நூலில் உள்ள ஒவ்வொரு செய்தியும் தமிழ்ப் பண்பாட்டுச் சூழலில் குலதெய்வங்கள் பற்றி நம்மிடையே உள்ள கருத்துக்களைச் சீர்தூக்கிப் பார்த்து அலச வைக்கின்ற அருமையான நூல். தமிழர் தொன்மங்களை மீட்போம் என்றும் தமிழர் பண்பாடு, பாரம்பரியங்களைக் காப்போம் என்றும் அண்மைய காலமாக தமிழ்த் தேசிய அமைப்புகள் பேசுகின்றன என்று கூறி, இவர்கள் காப்பாற்ற முயல்வதெல்லாம் தமிழர் பண்பாடுகள் அல்ல - முழுக்க முழுக்க ஆரியப் பார்ப்பன பண்பாடுகளைத்தான் என்று நூலின் முன்னுரை தொடங்குகிறது.

குலதெய்வங்கள், சிறு தெய்வங்கள் நாட்டார் தெய்வங்கள் ஆகியவை தமிழ்ச் சூழலில் எவ்வாறு இயங்குகின்றன என்பதையும் நிஜத்தில் எவ்வாறு அவை உள்ளன என்பதைக் கள ஆய்வுகளை நிகழ்த்தி இந்த நூலை சில தோழர்கள் இணைந்து உருவாக்கி இருக்கின்றார்கள். கேள்வி பதில்களாக,

சிறிய சிறிய பத்திகளாக, கருத்துகள் நூலில் வழங்கப்பட்டுள்ளன. இது வாசிப்போருக்குக் கூற வரும் கருத்தை எளிதாக உள்வாங்கிக் கொள்ள உதவுகிறது.

முற்போக்கு அமைப்புகளில் தீவிரமாகச் செயல்படும் தோழர்கள் பலர் பல்வேறு செயல்பாடுகளுக்காக சமூகத்தில் போராடினாலும் தங்களுக்கு என வரும்போது தங்கள் குடும்பத்தாருக்கு, குழந்தைக்குக் குலதெய்வக் கோவிலில் மொட்டை அடிப்பது, காது குத்துவது, பிள்ளைகளுக்குச் சொந்த ஜாதியில் திருமணம் செய்து வைப்பது என்று தங்கள் சாதி வட்டத்திற்குள் தான் அடங்கிப் போகின்றார்கள் என்ற கசப்பான உண்மையையும் நூல் பேசுகிறது.

குலதெய்வங்கள் நமது முன்னோர்கள் தானே - அந்த வகையில் தமிழ் நிலத்தின் போற்றப்பட வேண்டிய கடவுள்கள் தானே என நினைத்தால், ஒவ்வொரு குலதெய்வத்தையும் ஒரு சாதி சார்ந்துதான் அடையாளப்படுத்த முடிகிறது. சாதி என்ற அடித்தளத்தில் தான் குலதெய்வங்கள் கோயிலாக நிற்கின்றன என்பதை நூல் அப்பட்டமாக வெளிப்படுத்துகிறது.

இது தெய்வத்தின் குற்றம் இல்லையே, மனிதர்களைத் திருத்தினால் சாதியை அழிக்க முடியாதா? வழிப்பாட்டு முறையை அழிக்கத்தான் வேண்டுமா? என்று கேட்பவருக்குப் பதிலாக, சாதி என்ற கருதுகோள் அந்த மனநிலையை நினைவுபடுத்தும்

நடைமுறைப்படுத்தும் எவையாக இருந்தாலும் அதனை அழிக்காமல் மனிதர்களின் மனநிலை எப்படி மாறும்? ஆகவே சாதியை நினைவுபடுத்தும், நடைமுறைப்படுத்தும், பயிற்றுவிக்கும், பயன்படுத்தும் வழக்குகளை அழிப்பது தான் சாதியை அழிப்பதற்கு அடிப்படை என்கிறது இந்த நூல்.

வணங்கப்படுவது பார்ப்பன தெய்வமோ, தமிழ் தேசியஇன தெய்வமோ, திராவிடர் மரபின தெய்வமோ.. எதுவாக இருந்தாலும் தெய்வங்கள் முழுக்க முழுக்க சாதிக்கு ஒன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளன. சாதிக்குள்ளேயே பல உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன என்பதைக் கூறி திருப்பூர், திண்டுக்கல் ஆகிய இரண்டு மாவட்டங்களில் விரிவாக நடத்தப்பட்ட கள ஆய்வில் திரட்டப்பட்ட தகவல்களை நூல் பட்டியலிடுகிறது.

பெரும் கோயில்களில் தான் தீண்டாமையும் ஒடுக்கப்பட்டோரையும் அனுமதிக்காத கட்டுப்பாடுகளும் இருக்கின்றது என்று நாம் நம்பிக் கொண்டிருந்தால் நம்மையே நாம் ஏமாற்றிக் கொள்வதாக ஆகின்றது. ஏராளமான குலதெய்வ கோவில்களில் ஒரு குறிப்பிட்ட சாதி சமூகத்தவரைத் தவிர ஒடுக்கப்பட்டோர், தாழ்த்தப்பட்டோர் கோயிலுக்குள் அனுமதிக்கப்படவில்லை என்பதை இந்த நூல் கள ஆய்வுகளின் வழி துல்லியமாகப் பட்டியல் இடுகிறது.

திண்டுக்கல் மாவட்டம் ஒட்டன்சத்திரத்தில் தாழ்த்தப்பட்டோரை அனுமதிக்காத நாட்டார் கிராம தெய்வங்களின் 39 கோயில்களின் பெயர்களை இந்த நூலில் ஆய்வுக் குழு பட்டியலிட்டு இருக்கிறது. கள்ளர்கள், சக்கிலியர்கள், கொங்கு வேளாளர்கள் என சில குறிப்பிடத்தக்க சமூகங்களில் குலதெய்வங்களைப் பற்றியும் நூல் பேசுகிறது.

உலகத்தின் எந்த மூலைக்குத் தமிழ் மக்கள் போய்ச் சேர்ந்தாலும் கூட, ஒருவர் என்ன சாதி என்று தெரிந்து கொள்ள உங்கள் குலதெய்வம் எது? உங்கள் ஊர் எது? என்று கேட்டால் போதும் சாதி அடையாளத்தைக் கண்டுபிடித்து விடலாம் என்று கூறும் அளவிற்குக் குலதெய்வங்கள் சாதியோடு இரண்டற கலந்து போயிருக்கின்ற நிலையை இந்த நூல் தெளிவாகவே விளக்குகிறது.




காட்டாறு பதிப்பகத்தின் வெளியீடாக (kaattaaru2014@gmail.com) வந்திருக்கும் இந்த நூல் சிந்திக்கத் தூண்டும் ஒரு நூல். இந்த நூலை உருவாக்கிய ஆய்வுக்குழுவில் பணியாற்றிய அத்தனை தோழர்களையும் பாராட்டத்தான் வேண்டும்!

## "வைக்கம் நூற்றாண்டு"

### — முனைவர் சிவ இளங்கோ, புதுச்சேரி

வைக்கம் கேரளாவில் உள்ள ஒரு நகரம். கேரளவாசிகளுக்கு வைக்கத்தப்பன் குடி கொண்டுள்ள ஊர். தற்போது கோட்டயம் மாவட்டத்தில் வட்டத் தலைநகராக இருக்கும் இந்த ஊர், "வைக்கம் போராட்டம்" மூலம் அறியப்படும் முக்கிய நகரமாகும். ஒரு நூற்றாண்டுக்கு முன்பு வைக்கம், திருவாங்கூர் சமஸ்தானத்தின் கட்டுப்பாட்டில் இருந்தது. இந்தியாவின் கேரளா மாநிலத்தின் தென் பகுதிகளையும், தமிழ்நாட்டின் கன்னியாகுமரி மாவட்டத்தையும் உள்ளடக்கி இருந்த மன்னராட்சிப் பகுதியே திருவாங்கூர் சமஸ்தானமாகும். பிரிட்டிஷ் இந்திய ஆட்சியில் மன்னர்கள் ஆளும் பகுதிகளைச் சமஸ்தானங்கள் என்று அழைத்ததால் இது திருவாங்கூர் சமஸ்தானம் என்று அழைக்கப்பட்டது (பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் போன்று சமமான ஸ்தானம் கொண்ட நாடு - சமஸ்தானம்).

1729 ஆம் ஆண்டு தொடங்கி, முப்பதாண்டுக் காலம் திருவிதாங்கூர் சமஸ்தானத்தை மார்த்தாண்ட வர்ம மகாராஜா ஆண்டு வந்தார். இவர் பார்ப்பனர்களின் ஆலோசனைகளைக் கேட்டு ஆட்சி புரிந்தார். பார்ப்பனர்கள் சொல் கேட்டு நாட்டை, பத்மநாப

சுவாமிக்குக் காணிக்கை ஆக்கியதன் மூலம் உண்மையில் பார்ப்பனர்களுக்கே காணிக்கையாக்கினார். அவர்களுக்கு உணவளிப்பதற்காகவே நாடு முழுவதும் 'ஊட்டுப்புரைகள்' எனப்படும் சோறூட்டு மனைகளை நிறுவினார். மேலும் பார்ப்பனர்களுக்காக ஆறு ஆண்டுகளுக்கு ஒரு முறை ஏராளமான பொருட்செலவில் 'முறைஜெபம்' என்ற உற்சவத்தை நடத்தினார். இதனால் 'தண்டச் சோறுண்ணும் பார்ப்புக்கு ஒரு நீதி' என்று பாரதி பாடியது போலவே, பார்ப்பனர்கள் ஆட்சியிலும், அதிகாரத்திலும் கோலோச்சும் நிலை ஏற்பட்டது. இதன் விளைவாக இப்பகுதிகளில் தீண்டாமை கடுமையாகக் கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. காணாமை, நடவாமை என்னும் உச்சகட்டக் கொடுமைகளும் நடந்தேறின.

உயர் சாதியினர் வாழும் இடங்களில் நாடார், ஈழவர், புலையர், தீயர் போன்ற வகுப்பினரைத் தாழ்த்தப்பட்ட சாதியினர் என்று கூறிப் பார்வையில் இருந்தும் விலக்கி வைத்தனர். பொதுக்குளங்கள், கிணறுகள், சந்தைகள், சாலைகள் ஆகியவற்றைப் பயன்படுத்தவும் தடை விதிக்கப்பட்டிருந்தது. இவர்கள் தங்களையே தாழ்த்திக் கொள்ளும் வகையில் ஆடை, அணிகலன் அணிய வேண்டும். பண்டம், பாத்திரம், வாழ்விடம் அமைத்துக் கொள்வதிலும் கட்டுப்பாடுகள் நிறைய உண்டு. இவர்கள் இறை வழிபாடு செய்வதிலும் பல கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. கோயில் நுழைவு

மட்டுமல்ல, கோவிலைச் சுற்றியுள்ள தெருக்களில் கூட இவர்கள் நடமாடத் தடை இருந்தது. இவர்களைப் போலவே ஆயித்தக்காரர், ஆசாரிகள், வாணியர்கள், நெசவாளிகள் ஆகியோரும் பொதுவிடங்களில் நடத்தப் பட்டனர். இவற்றிற்கே உரிமையில்லை. கல்விக்கு மட்டும் உரிமை கிடைத்து விடுமா என்ன, அதற்கும் தடை தான்.

தமிழ் மன்னர்கள் ஆண்ட சேர நாடு, 13ஆம் நூற்றாண்டில் மாளவர்களின் வருகைக்குப் பிறகு சமஸ்கிருத மயமாகிப் போனது. அதனால் பார்ப்பனர்களின் சனாதனமே மேலோங்கி இருந்தது. நம்பூதிரி பிராமணர்களான ஆரிய வம்சாவழியினர் சாதி வரிசையின் முதலிடத்திலும், நாட்டையாண்ட அரச பரம்பரையினர்களான சத்திரியர்கள் இரண்டாமிடத்திலும், வணிகத்தைத் தங்கள் தொழிலாகக் கொண்ட வைசியர்கள் மூன்றாமிடத்திலும், இம்மூவர்களுக்கும் ஏவல் தொழில் புரிந்து வந்த ஆரியக் கலப்பின சூத்திரர்களான நாயர்கள் நான்காம் இடத்திலும் மனுதர்ம அடிப்படையில் வரிசைப் படுத்தப்பட்டனர். இந்த நான்கு பிரிவுகளிலும் உள்ளடங்காத பூர்வகுடி மக்களைப் பஞ்சமர்கள் அல்லது சண்டாளர்கள் என்று குறிப்பிட்டனர்.

ஒரு நம்பூதிரி பிராமணனுக்குப் பக்கத்தில் நாடாளுகின்ற சத்திரியர்கள் செல்லலாம். ஆனால் தொடக்கூடாது. மன்னனின் அருகில் சூத்திரர்களான நாயர்கள் செல்லலாம். ஆனால் தொடக்கூடாது. ஒரு

நம்பூதிரியிடமிருந்து நாயர் இரண்டு அடித் தொலைவிலும், ஒரு நாடார் 12 அடி தொலைவிலும், ஒரு செறுமர் முப்பது அடித் தொலைவிலும், ஒரு பறையர் அல்லது புலையர் 72 அடித் தொலைவிலும் நிற்க வேண்டும் என்று கட்டுப்பாடுகள் நடைமுறையில் இருந்தன. தீண்டத்தகாதவர்கள் என்று உயர் சாதியினரால் அடையாளம் காட்டப்பட்டவர்கள் கோவிலில் சென்று இறை வழிபாடு செய்வது மறுக்கப்பட்டிருந்தது. கோவில் தெருக்களில் நடக்கவும் அனுமதி மறுக்கப்பட்டது. தீண்டப்படாதோர் என்று முத்திரை குத்தப் பட்டவர்கள் அணியும் ஆடை, அணிகலன்களிலும் கடுமையான கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. உயர் சாதியினரைப் போன்று, குறிப்பாக நாயர் சாதியினரைப் போன்று ஆடை அணிய அனுமதிக்கப்படவில்லை.

ஆண்களும், பெண்களும் கால் மூட்டுக்குக் கீழும், இடைக்கு மேலும் ஆடை அணிவதற்குத் தடை விதிக்கப்பட்டிருந்தது. உயர் சாதியினர் முன் கீழ்சாதிப் பெண்கள் மார்பை மறைத்து மேல்முண்டு அணிந்து சென்றால் அது அவர்களை அவமதிக்கும் செயல் என்று உயர் சாதியினர் கருதினர். இக் கட்டுப்பாடுகளை மீறுபவர்கள் அடித்துத் துன்புறுத்தப்பட்டு அவர்கள் மேலாடைகள் கிழித்து எறியப்பட்டன. மார்பை மறைக்க வேண்டும் என்றால் 'முக்கியம்' என்ற வரி செலுத்த வேண்டும். அப்படியும் பார்ப்பனன் முன் சீலையை விலக்கி நிற்க வேண்டும். இதை எதிர்த்துச் 'சேர்த்தலா' என்னும் கிராமத்தில்

நாஞ்சலி என்ற ஈழவா குலப்பெண்மணி முலைவரி செலுத்தாமல் மார்பை அறுத்தெறிந்து உயிரை விட்டார். அந்த இடம் 'முலைச்சிப் பறம்பு வழிபாட்டுத் தல'மாக இன்றும் இருக்கிறது.

இந்த வரியில் இருந்து கிறிஸ்துவ, முஸ்லிம் பெண்களுக்கு விலக்கு இருந்தது. அதனால் அவர்கள் 'குப்பாயம்' என்னும் மேல் சட்டை அணிந்தனர். இதனால் தாழ்த்தப்பட்டவர்கள் பெருமளவில் கிறிஸ்தவர்களாக மாறிக் குப்பாயம் அணிந்து தங்கள் மானத்தை காத்துக் கொண்டனர். அப்போது நாராயணகுரு, அய்யா வைகுண்டர் போன்றோர் இந்து மதத்திற்கு உள்ளேயே இருந்து முலைவரிக்கு எதிராக மக்களைத் தூண்டிப் போராட்டம் நடத்தினர். மதம் என்ற போர்வை இல்லாமல் போராடிய பெரும் போராளி அய்யன் காளி மட்டுமே. "அடி உதவுவது போல் அண்ணன் தம்பி உதவ மாட்டான்" என்ற பழமொழிக்கேற்ப, களரி ஆசான் அய்யன் காளியும் போராடினார். இப்படிப் பல சீர்திருத்தவாதிகளின் போராட்டத்தினால், 1822 ஆம் ஆண்டு தொடங்கிய இந்தப் போராட்டம், 1859 ஆம் ஆண்டு முலைவரிச் சட்டம் நீக்கப்பட்ட பிறகு முடிவுக்கு வந்தது.

தோள்சீலைப் போராட்டம் நடந்து முடிந்தாலும், இன்னொரு பக்கம் தாழ்த்தப்பட்டோருக்கு ஆபரணங்களை அணியவும், குடை பிடிக்கவும், காலணி அணியவும், அனுமதி மறுக்கப்பட்டே வந்தது. ஓடு வேய்ந்த வீடுகளில் வசிப்பதும், பால் கொடுக்கும் பசுக்கள் வளர்ப்பதும், வாகனங்கள்

உபயோகிப்பதும் தடை செய்யப்பட்டிருந்தது. திருமணப் பந்தல்களில் அலங்காரம் செய்வதும் மறுக்கப்பட்டது. பெண்கள் தண்ணீர்க் குடத்தை இடையில் சுமந்து செல்ல அனுமதிக்கப்படவில்லை. குடத்தைத் தலையில் வைத்து இருகைகளாலும் அதைத் தாங்கிப் பிடித்துச் செல்லவே அனுமதிக்கப்பட்டனர். மொத்தத்தில், "சாதிப் பைத்தியங்கள் வாழும் பைத்தியக்கார விடுதியே கேரளா" என்று விவேகானந்தர் சொன்னதை நூறு விழுக்காடு சரி என்று நிரூபித்தது கேரளப் பண்பாடு.

இறைவழிபாடு செய்வதிலும், பலவிதக் கட்டுப்பாடுகள் கீழ்சாதியினர் என்று அடையாளப்படுத்தப்பட்டவர்களுக்கு விதிக்கப்பட்டிருந்தது. அரசும், உயர்சாதியினரும் நிர்வகித்து வந்த கோவில்களில் நுழையவோ, வழிபாடு நடத்தவோ, கோவில்களின் வெளிப் பிரகாரங்களில் செல்லவோ கூட அவர்கள் அனுமதிக்கப்படவில்லை. தங்கள் வழிபாட்டிற்கென இவர்கள் எழுப்பிய கோவில்களில் கூட உயர்சாதியினர் வழிபடும் சிவன், பிரம்மா, விட்டிணு போன்ற தெய்வங்களை வழிபடத் தடை விதிக்கப்பட்டிருந்தது. வீரபத்திரன், மாடன், சுடலை, வீரன், மாடசுவாமி, இருளன், முத்தாரம்மன், பத்ரகாளி போன்ற தெய்வங்களையே இவர்கள் வழிபட்டனர். மதச்சடங்குகளைக் கடைப்பிடிப்பதிலும் பலவிதக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. நெய், பால், போன்ற பொருட்கள் உயர்சாதியினர்க்கும், கள், சாராயம் போன்ற

பொருட்கள் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் என்று வகைப்படுத்தப் பட்டிருந்தது.

இப்படியெல்லாம் கட்டுப்பாடுகள் நிலவி இருந்த காலத்திலும் பிரிட்டிஷ் ஆட்சியின் கல்வி முறையால் ஒரு சிலர் கல்வி பெற்றனர். அப்படிக் கல்வி கற்று வழக்குரைஞராகப் பணிபுரிந்து வந்த டி. கே. மாதவன் என்பவர், நீதிமன்றத்திற்குச் செல்ல ஊரில் உள்ள கோவிலின் சுற்றுச்சுவர் பகுதி வழியாகச் சாலையைக் கடக்க முயன்றார். அப்போது திருவாங்கூர் அரசரின் பிறந்தநாள் வழிபாடு தொடங்கிவிட்ட நிலையில், மாதவன் ஈழவ வகுப்பினர் என்று கூறி, அவரை அவ்வழியில் நடந்து செல்ல விடாமல் தடுத்தனர். அவர் நீதிமன்றம் செல்ல வேண்டுமானால், வேறு பாதையில் ஒரு மைல் தூரம் சுற்றிக்கொண்டு செல்ல வேண்டும். இதுபோன்ற பல நடவடிக்கைகளால் பாதிக்கப்பட்டு ஏற்கனவே மனம் குமுறிக் கொண்டிருந்த மக்கள், வழக்கறிஞர் மாதவனின் தொடர் முயற்சிகளால், இவற்றையெல்லாம் எதிர்த்து சக்தியாகிரகப் போராட்டம் நடத்த முடிவெடுத்தனர்.

வைக்கம் போராட்டக் காலத்தில் மகாத்மா காந்தியால் பிரிட்டிஷாரை எதிர்த்து நடத்தப்பட்ட சத்தியாக்கிரகப் போராட்டம் இந்தியா முழுவதிலும் உச்சக்கட்டத்தில் இருந்தது. போராட்டங்களை அகிம்சை முறையில் நடத்துவதையே காந்தி முழுதும் விரும்பினார். அதனால் காங்கிரஸ் சத்தியாகிரகிகளுக்கு அவர் நிறைய

கட்டுப்பாடுகளை விதித்திருந்தார். அதே நேரம் சமஸ்தான அரசர்களுக்கும் அவர் அறிவுரை கூறி வந்தார்.

"காங்கிரசின் சக்தியை அலட்சியம் செய்ய வேண்டாம் என்று அரசர்களை நான் வேண்டிக் கொள்கிறேன். இப்பொழுதும் காங்கிரசின் கொள்கை அகிம்சைதான். ஆனாலும் அது அதிக வேகமாகப் பலாத்காரத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது என்பதை ஒப்புக் கொள்கிறேன். காங்கிரஸ் அகிம்சையை விட்டுப் பிறழாமல் இருப்பதற்காக நானும் என் நண்பர்களும் பெரிதும் முயன்று வருகிறோம். சமஸ்தான அதிபதிகளிடம் உள்ள அதிகாரம் பிரஜைகளுக்கும், பலாத்காரம் அற்ற முறையில் மாற வேண்டுமானால், அவர்கள் எல்லோரும் காலப்போக்கை அனுசரித்து நடந்து கொள்ள வேண்டும்" (மகாத்மா காந்தி, சமஸ்தானப் பிரச்சனை, பக்கம் 6-9).

திருவிதாங்கூர் சமஸ்தானப் பிரச்சனைகளையும் காந்தி அவருடைய உதவியாளர்கள் வழி அறிந்து வந்தார். கேரளக் காங்கிரஸ்காரர்களும் கடிதம், தந்தி வழி அவ்வப்போது நிலைமையைத் தெரிவித்து வந்தனர். வைக்கம் சத்தியாகிரகம் குறித்து எடுக்கப்பட்ட முடிவைக் காந்தியின் பார்வைக்கு, 13.3.1924 அன்று, கேரள காங்கிரஸ் கமிட்டியின் செயலாளர் கே. பி. கேசவமேனன் கடிதம் எழுதித் தெரிவித்து விட்டுப் பிற காங்கிரஸ்காரர்களுடன் 'முறைஜெப'த்தன்று போராட்டத்தில் இறங்கினார்.

('முறைஜெபம்' என்பது ஆறு ஆண்டுகளுக்கு ஒருமுறை, ஏராளமான பொருட்செலவில், பார்ப்பனர்களை மகிழ்விக்க, மன்னர் கொண்டாடும் உற்சவக் காலம் - தவத்திரு தர்மதீர்த்த அடிகளார், இந்துமதக் கொடுங்கோன்மை வரலாறு நூல், விடுதலை, 1.4.2023).

ஆனால் காந்தியின் அறிவுரைப்படி, இந்தப் போராட்டம் தற்காலிகமாக ஆறு நாட்கள் நிறுத்தி வைக்கப்பட்டு மீண்டும் தொடங்கியது.

காந்தியடிகள் வைக்கம் போராட்டத்தைக் கடிதம் வழியிலும், பத்திரிகை வழியிலும் அவ்வப்போது நெறிப்படுத்திக் கொண்டே இருந்தார். இப் போராட்டத்தில் சீக்கியர், இஸ்லாமியர், கிறிஸ்தவர்கள் கலந்து கொள்ளக் கூடாது என்று காந்தி எழுதினார். அதனால் பஞ்சாபிலிருந்து போராட்டக்காரர்களுக்கு உணவளிக்க வந்த சீக்கியர்கள் திரும்பி விட்டனர். இஸ்லாமியர்களும் போராட்டத்தில் இருந்து விலகி விட்டனர். கிறிஸ்தவர்களும் அப்படியே. ஆனால், போராட்டக் களத்தில் முக்கிய பங்காற்றிய ஜார்ஜ் ஜோசப் மட்டுமே, "நான் என் சுயமரியாதையை விட்டுவிட்டு இருக்க மாட்டேன். வேண்டுமானால் என்னை காங்கிரசிலிருந்து விலக்கி விடுங்கள்" என்று போராட்டத்தில் இருந்து அவரை விலகச் சொன்ன ராஜாஜிக்கும், காந்திக்கும் கடிதம் எழுதினார்.

"காந்தி சத்தியாகிரகப் போராட்டத்திற்கு விரோதமாக ஏதாவது எழுதி பணத்தையும், ஆட்களையும் தடுத்து விடுவாரோ" என்று சிலர் பயந்தனர். களத்தின் நிலவரத்தை அறிந்து கொள்ளாத நிலையில்தான் காந்தியின் கட்டளைகள் இருந்தன. "இப்படிப்பட்ட நெருக்கடியான நிலையில் மகாத்மா காந்தியின் கட்டளையும், அதை மீறிச் சத்தியாகிரகப் போராட்டம் நடைபெற்று வந்ததும் அந்தப் போராட்டத்திற்குப் பெரிய மரியாதையையும், செல்வாக்கையும் தேடிக் கொடுத்து விட்டன" என்று பின் நாட்களில் கன்னியாகுமரி மாவட்டம் மார்த்தாண்டத்தில் நடைபெற்ற திராவிடர் கழகக் கூட்டத்தில் பெரியார் கூறியிருக்கிறார் (விடுதலை, 8.1.1959).

இந்தப் போராட்டம் நடந்து கொண்டிருந்தபோது வழக்குரைஞர் மாதவன், டி. கே. மாதவன், பாரிஸ்டர் கேசவமேனன், கே. கேளப்பன், ஜார்ஜ் ஜோசப், செபாஸ்டியன், கே.ஜி. ராய் உட்படப் பலர் திருவாங்கூர் மன்னர் ஆணைப்படி கைது செய்யப்பட்டனர். போராட்டக்காரர்கள் பலரும் கைது செய்யப்பட்டு விட்ட நிலையில், சத்தியாகிரகத்தைத் தலைமை ஏற்று நடத்த யாரும் இல்லை. எனவே சிறையில் இருந்தபடியே ஜார்ஜ் ஜோசப், மற்றும் குரூர் நீலகண்ட நம்பூதிரி ஆகிய இருவரும் சேர்ந்து பெரியார் ஈ.வெ.ரா.வுக்கு ஒரு கடிதம் எழுதினர். அப்போது தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவராகப் பெரியார் இருந்தார்.

அவருக்கு எழுதிய கடிதத்தில், "அடக்குமுறை பலமாக இருந்த காரணத்தினால் தாங்கள் போராட்டத்தைத் தொடங்கியதாகவும், அத்தனை சீக்கிரத்தில் தாங்கள் கைது செய்யப்பட்டு விடுவோம் என்று எதிர்பார்க்கவில்லை என்றும், ஆகையால் ஈ.வெ.ரா, வைக்கம் வந்து சத்தியாகிரகத்தை ஏற்று நடத்த வேண்டும்" என்றும் அவர்கள் சிறையில் இருந்தபடியே கடிதம் அனுப்பினார்கள். குரூர் நீலகண்டன் தந்தியும் அனுப்பினார். அப்போது பெரியார் குளித்தலை அரசியல் மாநாடு முடித்து மதுரை ஜில்லா சுற்றுப்பயணத்தில் இருந்தார். அங்கு நோய்வாய்ப்பட்டு ஈரோடு வந்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். இச்சமயத்தில் தான் வைக்கத்திலிருந்து அனுப்பப்பட்ட கடிதம் அவருக்குக் கிடைத்தது.

கேரள காங்கிரஸ் கமிட்டியின் தீவிர அழைப்பை ஏற்று, தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைமைப் பொறுப்பை ராஜாஜிக்கு ஒரு கடிதம் மூலம் மாற்றிக் கொடுத்துவிட்டு, 13.4.1924 அன்று, ஈ.வெ.ரா. அவர்கள், கோவை அய்யாமுத்து, எம்பெருமாள் நாயுடு உள்ளிட்ட தோழர்களுடன் வைக்கம் புறப்பட்டார். முதல் கட்டமாக, ஏப்ரல் 16 ஆம் தேதி பெரியார் சத்தியாகிரகப் பொதுக்கூட்டத்தில் பேசும்போது, "சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவை நிறுவப்பட வேண்டுமானால் முதலில் தீண்டாமைக்கும், அணுகாமைக்கும் முடிவு கட்ட வேண்டும்" என்றார்.

வைக்கம் வந்து போராட்டத்தில் ஈடுபட்ட 15 நாட்களுக்குள் ஈ.வெ.ரா. பேசுவதற்குத் தடை விதிக்கப்பட்டது. கோட்டயம் மாவட்டத்திற்குள் பிரவேசிக்கவும், நுழையவும் தடை போடப்பட்டது. பின்னர் அந்தத் தடை கொல்லம் மாவட்டத்திற்கும் நீண்டது. எந்தத் தடையையும் பொருட்படுத்தாத ஈ.வெ.ரா. தொடர்ந்து சமஸ்தானம் முழுவதும் பிரச்சாரத்தில் ஈடுபட்டார். தொடர்ந்து வைக்கம் போராட்டத்திற்குப் பணமும், தொண்டர்களும் சேர்ப்பதற்காக அங்குள்ள முக்கிய நபர்களுடன், ஏப்ரல் 23 ஆம் தேதி, தென் திருவாங்கூருக்குப் புறப்பட்டுச் சென்றார்.

மே மாதம் முதல் நாள் (1924) திருவனந்தபுரத்திலும், மூன்றாம் நாள் கொங்கணாச்சேரியிலும் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் உரையாற்றி வைக்கம் போராட்டத்திற்கு ஆதரவு திரட்டினார். பின்னர் அங்கிருந்து ஈரோடு சென்று தனது மனைவி நாகம்மையாரை அழைத்துக் கொண்டு, மே மாதம் 15 ஆம் தேதி மீண்டும் வைக்கம் வந்து போராட்டத்தைத் தொடர்ந்தார். அப்போது பேசிய அவர், "நாடு என்ன உங்க அப்பன் வீட்டுச் சொத்தா? நாட்டைப் பத்மநாப சுவாமிக்கு அர்ப்பணித்து விட்ட பிறகு, நாடே கோயில் சொத்து தானே" என்று மன்னரை நேராகப் பார்த்துப் பேசுவதைப் போல் பேசினார்.

'மன்னர் திருமனசைப் பாராட்டலாமே தவிர எதிர்த்துப் பேசுவது கூடாது' என்பது திருவாங்கூர் சமஸ்தான சம்பிரதாயம். இதன் பேரில் ஈ.வெ.ரா. மீது

விசாரணை நடத்தப்பட்டு, மே மாதம் 22ஆம் தேதி, அவருக்கு ஒரு மாத கால வெறுங்காவல் தண்டனையும், ஊர் விலக்கமும் வழங்கப்பட்டு 'அருவிகுத்தி' சிறையில் அடைக்கப்பட்டார். இதனைத் தொடர்ந்து பெரியாரின் துணைவி நாகம்மையாரும், களத்தில் இருந்த போராட்டக் குழுவினரும் சத்யாகிரகப் போராட்டத்தைத் தொடர்ந்தனர்.

ஒரு மாதம் முடிந்து ஜூன் 22ஆம் தேதி விடுதலையான பெரியார், மீண்டும் வைக்கம் சென்று போராட்டங்களில் கலந்து கொண்டார். இதனால் மேஜிஸ்ட்ரேட்டின் ஊர் விலக்க உத்தரவை மீறி நடந்ததற்காக விசாரிக்கப்பட்டு இரண்டாவது முறையாக, நான்கு மாதம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்.

தடையை மீறி மீண்டும் வைக்கம் வந்து சத்தியாகிரகத்தில் ஈடுபட்டதற்காக முதல் சிறைவாசம் முடிந்து விடுதலையான 27வது நாளில் 18.7.1924 அன்று கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்ட பெரியார், மீண்டும் கைது செய்யப்பட்டுக் கோட்டயம் மற்றும் திருவனந்தபுரம் மத்தியச் சிறையில் அடைக்கப்பட்டார்.

"கடுங்காவல் என்பது கால்களில் விலங்குச் சங்கிலி, தலையிலே கைதிகள் அணியும் குல்லாய், முழங்காலுக்குக் கீழ் தொங்கும் ஒரு வேட்டி, கழுத்தில் கைதி எண் குறிக்கப்பட்ட ஒரு மரப்பட்டை

இவற்றோடு ஈ. வெ. ராமசாமி, பிற கடுங்காவல் தண்டனைக் கைதிகள் எவ்வளவு வேலை ஒரு நாளைக்குச் செய்வார்களோ அதைப் போல் இருமடங்கு வேலை செய்கிறார்" என்று அவரோடு அரசியல் கைதிச் சலுகைகளுடன் சிறை வைக்கப்பட்டிருந்த கேரளக் காங்கிரஸ் கமிட்டியின் செயலாளர் திரு கே.பி. கேசவமேனன் தன்னுடைய நினைவலைகளில் கூறியிருக்கிறார்.

"ஈ.வெ.ரா. அவர்களுக்கு இருக்கக்கூடிய நாட்டுப்பற்று, உற்சாகம், அனுபவம், பெருந்தன்மை, பெரும்பக்குவம் இவைகள் எல்லாம் உடைய இன்னொருவரை இந்த நாட்டிலே அந்த அளவுக்குக் காண முடியுமா? இந்த மாநிலத்து மக்கள் அனுபவிக்கிற கொடுமையை நீக்க வேண்டும் என்பதற்காக எவ்வளவு கஷ்ட நஷ்டங்களை வேண்டுமானாலும் ஏற்கலாம் என்று சொல்லி ஒரு தலைவர் வந்தாரே அதைப் பார்த்து இந்த மாநில மக்கள் யாருக்குமே வெட்கம் ஏற்படவில்லையா? கேரளத்தின் முதிர்ந்த அனுபவம் மிக்க தலைவர்கள், தங்கள் சாய்வு நாற்காலியைத் தூக்கி எறிந்து விட்டுத் தங்கள் பங்கைச் செலுத்த இப்போதாவது வர வேண்டாமா?" என்றும் கேசவமேனன் கேள்வி எழுப்பினார்.

பெரியாருக்கு விதிக்கப்பட்ட கடுங்காவல் தண்டனை குறித்து ராஜாஜியும் கண்டித்து எழுதினார். "ராமசாமி நாயக்கரைக் கடுங்காவல் தண்டனையில் வைத்திருப்பதும், இரும்பு விலங்கிட்டிருப்பதும்,

அவருக்குச் சிறை உடை அணிவித்து இருப்பதும், மற்ற சத்தியாகிரகிகள் சரியாகப் பெற்றுள்ளவற்றை அவருக்கு மறுப்பதும் நியாயப்படுத்தவே முடியாதவை" என்று 'தி இந்து', 27. 8. 1974, ஆங்கில நாளிதழில் எழுதி இருந்தார் ராஜாஜி (முனைவர் பழ. அதியமான், விடுதலை, 1.4.2023).

"ஒரு சத்தியாக்கிரகியை, திருவாங்கூர் அரசாங்கம் இவ்வாறு துன்புறுத்துவது தர்மமோ என்று கேட்கிறோம்" என்று திரு.வி.க.வும் கண்டனக் குரல் எழுப்பி, "வைக்கம் வீரர் பெரியார்" என்ற அடைமொழியையும் சேர்த்திருந்தார்.

வைக்கம் போராட்டத்தில் பெரியாரின் நிலை குறித்துச் சென்னை மாகாண அரசாங்கத் தலைமைச் செயலருக்கு இ. காட்டன் என்னும் ஆங்கிலேய ஐ.சி.எஸ் அதிகாரி எழுதியிருந்த கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

"வைக்கத்தைச் சுற்றியுள்ள கிராமங்களிலும், திருவாங்கூர் சமஸ்தானத்தின் மற்ற இடங்களிலும் அவர் பேசியவை மக்களின் உள்ளங்களை ஆழமாகத் தொட்டன. அவருடைய தீர்க்கமான தர்க்கமுறையில் அமைந்த வாதங்கள், தடுமாற்றம் உள்ளவர்களைச் சத்யாகிரகத்திற்குச் சார்பாக மாற்றியதுடன், எதிர்த்தவர்களையும் அவ்வாறே ஆக்கியது. சத்தியாகிரகத்திற்குச் சில நாட்கள் தலைமை ஏற்றார். பின்பு கிராமங்களுக்குச் சென்று அதன் கொள்கைகளையும், குறிக்கோள்களையும்

பிரச்சாரம் செய்தார். அடுத்து காங்கிரஸ் குழுவோடு சேர்ந்து வெவ்வேறு இடங்களுக்குச் சென்றார். ராமசாமி நாயக்கருடைய பேச்சு மக்கள் மனதில் எளிதில் பதியக் கூடியதாகவும், காரசாரமான ஆற்றல் பெற்றதாகவும், திருவாங்கூர் அரசாங்கத்தின் கௌரவத்தைக் குலைப்பதாகவும் இருந்தது. எனவே, அவர் கைது செய்து சிறையில் அடைக்கப்பட்டார்".

நான்கு மாதங்களாக நடந்து வந்த வைக்கம் போராட்டம் ஒவ்வொரு நாளும் தீவிரமடைந்து வந்த நிலையில் பார்ப்பனர்களும், சாதி இந்துக்களும் வைக்கம் கோயிலில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரைக் கோயிலைச் சுற்றியுள்ள தெருக்களில் நடக்க விடலாமா என்று பூக்கட்டி வைத்துச் சாமியிடம் உத்தரவு கேட்டார்கள். அதற்கு 'அனுமதிக்கலாம்' என்று உத்தரவு வந்ததால், பார்ப்பனர்கள், "சாமிக்குச் சக்தி குறைந்து விட்டது" எனக் கூக்குரல் இட்டனர்.

மேலும் சத்யாகிரகிகளை நாசமாக்க வேண்டிப் பார்ப்பனர்களும், நாயர்களும் கூடி "சத்துரு சங்கார யாகம்" நடத்தினார்கள். இது அரசருக்கு எதிரானவர்களை அழித்துவிடும் என்று அரசரிடம் கூறி நம்ப வைத்து, அரண்மனையிலும் யாகம் நடத்தினார்கள். ஆனால் எதிர்பாராத விதமாக அரசர் இறந்து போனார்.

திருவிதாங்கூர் மன்னரின் இறப்பை அடுத்து அவருடைய வாரிசு அரசர் ஆனார். அதனை

முன்னிட்டு வைக்கம் போராட்டச் சத்தியாகிரகிகள் 19 பேரும், 30.8.1924 அன்று விடுதலை செய்யப்பட்டனர். எதிரிகளுக்காக யாகம் செய்யத் தொடங்கி மன்னரே இறந்துவிட்ட நிலையில், வைக்கம் போராட்டத்திற்கான எதிர்ப்புகளும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து வந்தன.

இதனால் போராட்டக்காரர்களோடு உடன்படிக்கை ஏற்படுத்திக் கொள்ள இராணி விருப்பம் தெரிவித்தார். ஆனால் திருவாங்கூர் சமஸ்தானத்தில் திவானாக இருந்த ஒரு பார்ப்பனர், சமஸ்தானத்தின் இராணி, ஈ.வெ.ரா. உடன் நேரடியாகப் பேசக்கூடாது என்று கருதி, ராஜாஜிக்குக் கடிதம் எழுதினார். ராஜாஜியும், இராணியுடன் பேசக்கூடிய வாய்ப்பை மகாத்மா காந்தியே பெற வேண்டும் என்று கருதி, காந்திக்குக் கடிதம் எழுதினார். 'எப்படியாவது காரியம் வெற்றியானால் போதும்' என்று ஈ.வெ.ரா.வும் அதற்கு ஒப்புக்கொண்டார். இதன்படி வைக்கம் புறப்பட்டு வந்த மகாத்மா காந்தியை, 8. 3. 1925 அன்று ஈரோட்டில் வரவேற்ற ஈ.வெ.ரா. மீண்டும் 12. 3. 1925 அன்று வர்க்கலையில் அவரோடு இணைந்து கொண்டார்.

பெரியாருடன் ஆலோசனை கலந்த பின்னர், காந்தி, திருவிதாங்கூர் சமஸ்தான அரண்மனைக்குச் சென்று இராணியோடு பேசினார். கோயிலை ஒட்டிய சாலைகளைத் திறந்து விடுகிறோம் என்று ஒப்புக்கொண்ட இராணியார், "ஆனால் அதைத் திறந்த பிறகு கோயிலுக்குள் போக உரிமை

வேண்டும் என்று ஈ.வெ.ரா. கேட்டு ரகளை செய்தால் என்ன செய்வது?" என்று தயங்குவதாகக் கூறினார். அதனால் அப்போது விருந்தினர் மாளிகையில் தங்கி இருந்த ஈ.வெ.ராவை, 12.3.1925 இல் மகாத்மா காந்தி சந்தித்து, இராணி சொன்னதைத் தெரிவித்து, அவரது கருத்தினைக் கேட்டார். "இதை ஒப்புக்கொண்டு விடுவது நல்லது" என்றும் காந்தியே சொன்னார்.

"கோவில்களை ஒட்டி உள்ள பொதுச் சாலைகளைத் திறந்து விடுவது சரிதான். ஆனால் கோயிலைத் திறந்து விடும்படிக் கேட்க மாட்டோம் என்று எப்படி உறுதி அளிப்பது?" என்று காந்தியிடம் கூறிய ஈ.வெ.ரா., "என்றாலும் இப்போதைக்கு இம்மாதிரி கிளர்ச்சி எதுவும் இருக்காது. கொஞ்ச நாள் அது பற்றி மக்களுக்கு விளங்கும் படிப் பிரச்சாரம் செய்து, கலவரத்துக்கு இடம் இருக்காது என்று கண்டால்தான் கிளர்ச்சி ஆரம்பிக்கப்படலாம்" என்று தெரிவித்தார்.

இந்த உடன்படிக்கையை ராணியும் ஏற்று, அதன்படி திருவாங்கூர் சமஸ்தானத்தில் உள்ள கோவில்களின் சுற்றுப்பாதைகளில் அனைத்துச் சாதியினரும் நடந்து செல்லலாம் என்று அனுமதிக்கப்பட்டது. அத்துடன் பெரியார் வைக்கத்தில் தங்கியிருக்க விதிக்கப்பட்டிருந்த தடையும் விலக்கிக் கொள்ளப்பட்டது.

1925 ஆம் ஆண்டு, மார்ச் மாதம், திருவாங்கூர் சமஸ்தானத்தின் இராணியுடன் காந்தியடிகள் நடத்திய பேச்சு வார்த்தையில், சமஸ்தானத்தில்

உள்ள கோயில்களின் சுற்றுப் பாதைகளில் அனைத்துச் சாதியினரும் நடமாட அனுமதிப்பது என்று முடிவு எடுக்கப்பட்டது. மேலும் வைக்கம் பகுதிகளில் பெரியார் ஈ.வெ.ரா. நுழைவதற்கான தடையும் விலக்கிக் கொள்ளப்பட்டது.

"ஈ.வெ.ராமசாமி நாயக்கருக்கு விரோதமாகப் பிறப்பித்த தடை உத்தரவைத் திருவாங்கூர் கவர்மெண்டார் வாபஸ் வாங்கிக் கொண்டு விட்டார்கள் என்பதைக் கேட்க வாசகர்கள் சந்தோஷம் அடைவார்கள்" என்று காந்தியடிகள் தனது 'யங் இந்தியா', 23. 4. 1925 இதழில், தன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டார்.

அதுவரை இருந்த அனைத்துத் தடைகளையும் திருவாங்கூர் சமஸ்தானம், 27.11.1925 முதல் விலக்கிக் கொண்ட பின்னர், வைக்கம் வெற்றி விழா, 29. 11. 1925 இல் நடைபெற்றது. அதில் தனது துணைவியார் நாகம்மையாருடன் கலந்து கொண்ட பெரியார் ஈ.வெ.ரா., "நமது நோக்கம் அனைத்துச் சாதியினரும் சாலைகளில் நடக்க உரிமை பெறுவது மட்டுமல்ல; அனைவரும் கோயில்களில் நுழைய உரிமை பெற வேண்டுவதாகும்" என்று குறிப்பிட்டார்.

பெரியாரின் வாழ்க்கை வரலாற்றை முதன்முதலாகக் குறுங்காவியமாகப் பாடிய கவிஞர் புதுவைச் சிவம், அவரது வைக்கம் போராட்டத்தைப் பற்றிப் பின்வருமாறு கவிதை வடித்துள்ளார்.

"வைக்கத்தில் ஆதிதிரா விடரை வீதி
வழியினிலே நடக்கவொட்டாக் கொடுமை கண்டு,
குக்கலுளம் படைத்தவரின் ஆண வத்தைக்
குலைத்திடவே சமத்துவப்போர் தொடுத்தார் அங்கே!
அக்கொடியோர் பெருஞ்சீற்றச் சிறுசெ யற்கும்
அரசியலார் வெஞ்சிறைக்கு மஞ்சி டாமல்,
மிக்கஒரு வெற்றிகண்ட தாலே வைக்கம்
வீரரென நாட்டினர்கள் விளம்ப லுற்றார்!"

என்று 1944 ஆம் ஆண்டு, அவர் வெளியிட்ட "பெரியார் பெருந்தொண்டு" நூலில் கவிதை வடித்துள்ளார்.

வைக்கத்தில் நடந்த "கோயில் தெருவில் நடப்பதற்கான உரிமைப் போராட்டம்" கேரள காங்கிரஸ் கமிட்டியினர் நடத்திய போராட்டம். இந்தியாவில் சமஸ்தானங்கள், தனிநாடு என உரிமை பெற்றிருந்தாலும், பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் தயவில்தான் அவை அப்படி இருந்தன. "பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மனம் கோணினால் சமஸ்தானங்களின் உரிமை அடுத்த நொடியே பறிக்கப்பட்டு விடும்" என்று காந்தியும் எச்சரித்து வந்தார்.

அதனால் (பிரிட்டிஷார் கேலியாகப் பார்த்த) காந்தியின் 'மகாத்மா' பிம்பம் மீது, சமஸ்தானங்களுக்கு ஓர் அச்சம் இருந்தது. வைக்கம் போராட்டத்தைத் தொடங்கிய காங்கிரசின் சத்தியாகிரகிகள், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின்

உதவி கோரியும், அதன் தலைவர் ஈ.வெ.ரா. நேரில் வந்து கலந்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தியதால்தான், ராஜாஜியின் எதிர்ப்பையும் மீறி, ஈ.வெ.ரா. வைக்கம் சென்று போராட்டத்தை நடத்தினார்.

அதேநேரத்தில், வைக்கம் போராட்டத்திற்கும், திராவிட இயக்கத்திற்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்பதையும் இன்றைய அரசியல், சமூக ஆர்வலர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். வைக்கம் போராட்டம் முடிந்து, 1925 ஆம் ஆண்டு, காங்கிரசை விட்டுப் பெரியார் வெளியேறிய பின்னர்தான், சுயமரியாதை இயக்கம் உருவானது. குடியரசு இதழின் இயக்கமே சுயமரியாதை இயக்கமாக மாறிய வரலாற்றைப் பெரியாரே அவ்விதழில் பலமுறை எழுதியிருக்கிறார்.

காங்கிரஸ் கட்சித் தலைவராகப் பெரியார் வைக்கம் போராட்டத்தில் கலந்து கொண்டாலும், 'மனிதர் அனைவரும் சமம்' என்னும் கொள்கையும், 'சுயமரியாதை வாழ்வை அவர் வலியுறுத்திய கோட்பாடும்' தான் அவரை வழிநடத்தி வந்தன. அவர் காங்கிரசில் இருந்த போதும் சமத்துவத்தை வலியுறுத்தியவர் தான். எனவே அவரது தலைமையில் அமைந்த திராவிட இயக்கங்களும், அவர் வழியைப் போற்றும் திமுக உள்ளிட்ட அரசியல் கட்சிகளும் வைக்கம் தீண்டாமை எதிர்ப்புப் போராட்டத்தை, அது காங்கிரஸ் நடத்திய போராட்டம் என்றாலும், அதன் நூற்றாண்டில் உயர்த்திப் பிடிக்கின்றன. அதற்காக, இதற்கு மாறுபட்டக் கருத்து உள்ளவர்கள்,

திராவிட இயக்கங்களின் மீது காட்டும் வன்மத்தால், அப்படி எதுவும் நடக்கவில்லை என்று கூறி தீண்டாமையை வலியுறுத்தும் அளவுக்கா போய்விடுவார்கள்?

சான்றுகள்:

1.மகாத்மா காந்தி, சமஸ்தானப் பிரச்சனை, தினமணி விசேஷ வெளியீடு, சென்னை, 1947.

2.சாமி சிதம்பரனார், "தமிழர் தலைவர் பெரியார் ஈ.வெ.ரா. வாழ்க்கை வரலாறு", பாகம் 1, பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு, சென்னை, 2009.

3."விடுதலை" இதழ்கள், 8.1. 1959, 31. 3. 2023.

4."வைக்கம் போராட்டம் - தந்தை பெரியார் நினைவலைகள்", விடுதலை ஞாயிறு மலர், 2.4.2023.

5.முனைவர் பழ. அதியமான், "வைக்கத்திற்கும் பெரியாருக்கும் என்ன சம்பந்தம்?", கட்டுரை, விடுதலை, 1.4.2023.

6.சிவப்பிரகாசம், ச., "பெரியார் பெருந்தொண்டு", பூங்கொடிப் பதிப்பகம், புதுச்சேரி, 1944.

## *தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு*

### *ஜனவரி 1, 2023 — மார்ச் 31, 2023 நிகழ்வுகள்*

"தமிழ் எழுத்துக்களின் வளர்ச்சியை அறிவோம்"
ஜனவரி 5, 2023 — கல்வெட்டு எழுத்து மற்றும் வாசிப்புப் பயிலரங்கம்




சென்னை இலக்கியத் திருவிழா 2023வின் ஒரு பகுதியாக . . .
"தமிழ்நாடு அரசு – பள்ளிக் கல்வித் துறை" சென்னை இலக்கியக் கழகம் மற்றும் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு இணைந்து நடத்திய "தமிழ் எழுத்துக்களின் வளர்ச்சியை அறிவோம்" என்ற கல்வெட்டு எழுத்து மற்றும் வாசிப்புப்

பயிலரங்கத்தை முனைவர் க. சுபாஷிணி (தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு) அவர்களும் முனைவர் கோ. சசிகலா (ஆய்வாளர், தமிழ்நாடு தொல்லியல் துறை) அவர்களும் ஜனவரி 5, 2023, வியாழக்கிழமை அன்று, அண்ணா ஆதர்ஷ் மகளிர் கல்லூரியின் கலையரங்கத்தில் நடத்தினர்.




இந்த நிகழ்வில் ஏறக்குறைய 500 பேர் கலந்து கொண்டு பயன் பெற்றனர்.நிகழ்ச்சியை ஒருங்கிணைத்துத் தந்த திரு. ஒளிவண்ணன் அவர்களுக்கு நமது நன்றி.

## பச்சையப்பன் கல்லூரியுடன் இணைந்து மாணவர்களுக்கு மின்னூலாக்கப் பயிலரங்கம்

ஜனவரி 9, 2023

சென்னை பச்சையப்பா கல்லூரி மாணவர்களுக்கு பழம் நூல்கள் மின்னாக்கப் பயிலரங்கம் 9/1/2023 அன்று தமிழ் மரபு அறக்கட்டளையால் நிகழ்த்தப்பட்டது. இந்நிகழ்ச்சி முனைவர் சுபாஷிணியின் "ஐரோப்பிய தமிழியல்" என்ற உரையுடன் தொடங்கியது. தமிழ் மற்றும் வரலாற்றுத் துறை சார்ந்த ஆய்வு மாணவர்கள் மற்றும் பேராசிரியர்கள் இந்த நிகழ்ச்சியில் பங்கு பெற்றனர்.



அயலகத் தமிழர் நாள்-2023

ஜனவரி 11, 2023 கலைவாணர் அரங்கம் சென்னை, தமிழ்நாடு
— தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் தலைவர் முனைவர் க. சுபாஷிணி நிகழ்ச்சியில் வழங்கிய உரை



அயலகத் தமிழர் நாள்-2023 — தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் தலைவர் முனைவர் க. சுபாஷிணி உரை
**காணொளி:** https://youtu.be/T69UQjYUO78

சென்னை கலைவாணர் அரங்கத்தில், 11.01.2023 (புதன்) மற்றும் 12.01.2023 (வியாழன்) ஆகிய நாட்களில் நடந்த தமிழ்நாடு அரசு 2ஆம் ஆண்டு அயலகத் தமிழர் நாள் 2023 விழாவில் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் தலைவர் முனைவர் க. சுபாஷிணி அவர்கள் வழங்கிய உரை . . .

அயலகத் தமிழர் தினம் 2023
முனைவர் க.சுபாஷிணி உரை (தலைவர். தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு ஜெர்மணி.
நாள் 11.01.2023 கலைவாணர் அரங்கம் சென்னை, தமிழ்நாடு)

· மாண்புமிகு சிறுபான்மையினர் நலன் மற்றும் வெளிநாடு வாழ் நலத்துறை அமைச்சர் திரு செஞ்சி கே.எஸ். மஸ்தான் அவர்களே,

· மாண்புமிகு பாராளுமன்ற உறுப்பினர் திருமிகு கனிமொழி கருணாநிதி அவர்களே

· அயலகத் தமிழர் நலன் மற்றும் மறுவாழ்வுத்துறை ஆணையர் திருமதி ஜெசிந்தா லாசரஸ் இ ஆ ப. அவர்களே

· மற்றும் இந்த அரங்கில் உரையாற்ற வந்திருக்கும் ஏனைய அறிஞர் பெருமக்களே, அவையில் அமர்ந்திருக்கும் தமிழ் உறவுகளே, உங்கள் அனைவருக்கும் எனது இனிய காலை வணக்கம்.

என்னை பற்றிய ஒரு சிறிய அறிமுகம்.. எனது பெற்றோர் கடந்த 200 ஆண்டு கால வாக்கில் மலாயாவிற்கு வணிகம் செய்ய புலம் பெயர்ந்தவர்கள். நான் மலேசியாவின் பினாங்குத் தீவில் பிறந்து அங்கேயே கல்வி கற்று பின்னர் உயர்கல்விக்காக ஜெர்மனிக்கு வந்து கடந்த 22 ஆண்டுகளாக ஜெர்மனியில் கணிணித்துறையில் பணியாற்றி வருகின்றேன். உலகளாவிய வகையில் தமிழ் ஆவணங்களையும் மரபுச் செல்வங்களையும் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி பாதுகாத்து ஆய்வுகளுக்கு உட்படுத்தும் வகையில் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு என்ற ஓர் ஆய்வு

நிறுவனத்தை நிறுவி, அது இன்று தமிழ்நாடு, மலேசியா, இலங்கை, ஐரோப்பா ஆகிய இடங்களில் கிளைகளுடன் உலகளாவிய தமிழ், வரலாறு மற்றும் ஆவணப்பாதுப்பு நடவடிக்களை இலவசமாக ஆய்வு நோக்கில் செயல்படுத்தி வருகின்றது எமது அமைப்பு.

இத்தருணத்தில் என் கருத்துக்கள் சிலவற்றைப் பகிர்ந்து கொள்ள விழைகின்றேன்.

கடந்த 300 ஆண்டுகளில் உலகின் பல பகுதிகளுக்கு, குறிப்பாக பிரித்தானிய காலனித்துவ நாடுகள் மற்றும் தீவுகளுக்கும், பிரெஞ்சு காலனித்துவ தீவுகளுக்கும் மற்றும் நாடுகளுக்கும் தோட்டத் தொழிலாளர்களாகவும் அங்கு பொருளாதாரத்தை மேம்படுத்த கூலித்தொழிலாளிகளாகவும் புலம்பெயர்ந்த தமிழ் மக்கள் இன்று இப்புதிய நிலப் பகுதிகளில் தங்கள் வாழ்க்கையை நிலைப்படுத்திக் கொண்டு தனித்துவம் வாய்ந்த, ஆனால் தமிழ் வேர்களை மறக்காத வாழ்க்கையைக் கொண்டிருக்கின்றனர்.

கடந்த 100 ஆண்டுகள் காலகட்டத்தில் ஐரோப்பாவிற்குக் குடிபெயர்ந்த தமிழ்நாட்டினர் பெரும்பாலும் கல்வி மற்றும் தொழில் மேம்பாட்டிற்காகப் புலம்பெயர்ந்தவர்கள். இலங்கையில் நடைபெற்ற தொடர்ச்சியான போரின் காரணத்தால் லட்சக்கணக்கான மக்கள் புலம்பெயர்ந்து ஐரோப்பிய நாடுகளில் வாழ்கின்றார்கள். ஆக தமிழ்நாட்டில் இருந்தும் இலங்கையில் இருந்தும் இப்படி புலம்பெயர்ந்த

லட்சக்கணக்கான தமிழ் மக்களின் இரண்டாம் தலைமுறையினர் இப்பொழுது ஐரோப்பிய நாடுகளில் குறிப்பாக ஜெர்மனி, பிரான்சு, சுவிட்சர்லாந்து, இத்தாலி, ஸ்பெயின், பெல்ஜியம் போன்ற நாடுகளில் அதிக எண்ணிக்கையிலும், ஏனைய கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் குறிப்பிடத்தக்கக எண்ணிக்கையிலும் என்ற வகையில் வாழ்கின்றனர். மொழி, பண்பாடு ஆகிய இரண்டு கூறுகளும் அந்தந்த நாடுகளில் வழக்கில் உள்ள மொழிகள் மற்றும் பண்பாட்டுக் கூறுகளுடன் கலந்து தனித்துவத்துடன் இவர்கள் வாழ்க்கை முறையாக மாறிவிட்ட போதிலும் கூட தமிழ்நாடு அனைவருக்கும் தாய் நாடாகத்தான் திகழ்கிறது. அந்த வகையில் பண்பாட்டு ரீதியிலான தேவைகளுக்குத் தமிழ்நாட்டின் பங்களிப்பும் ஆதரவும் ஐரோப்பா வாழ் தமிழர்களுக்கு முக்கிய தேவையாக அமைகிறது.

கடந்த 2019 ஆம் ஆண்டு ஐரோப்பா விற்கும் தமிழ்நாட்டிற்கும் இடையே பண்பாட்டு தொடர்புகளை மீட்டெடுக்கும் வகையில் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு இரண்டு திருவள்ளுவர் ஐம்பொன் சிலைகளை ஜெர்மனியில் உள்ள லிண்டன் அருங்காட்சியகத்தில் நிறுவினோம்.

அதே 4.12. 2019 நாளை ஐரோப்பிய தமிழர் நாள் எனப் பிரகடனப்படுத்தி 2019 தொடங்கி ஒவ்வொரு ஆண்டும் ஐரோப்பிய தமிழர் நாள் விழாவை இதே நாளில் கொண்டாடி வருகின்றோம். இந்த மாபெரும் பண்பாட்டு நிகழ்வின் தொடர்ச்சியாகக் கடந்த ஆண்டு அக்டோபர் மாதம் ஜெர்மனியில் உள்ள

பாடன் ஊர்ட்டெம்பெர்க் மாநிலத்தோடு இணைந்து தமிழ் மரபு அறக்கட்டளை தமிழின் சிறப்புகளை உலகளாவிய மக்களுக்கும், குறிப்பாக ஐரோப்பிய மற்றும் ஜெர்மானிய மக்களுக்கும் அறிமுகப்படுத்தும் வகையில் 'அகம் புறம்' என்ற தலைப்பில் ஆறு மாத கண்காட்சியை இணைந்து தொடங்கி வைத்தோம். இந்த நிகழ்ச்சியைத் தமிழ்நாட்டில் இருந்து தமிழ் வளர்ச்சித் துறை தொழில்துறை மற்றும் தொல்லியல் துறைகளின் அமைச்சர் மாண்புமிகு திரு தங்கம் தென்னரசு அவர்களும் அறநிலையத்துறை மற்றும் அருங்காட்சியங்கள் துறையின் செயலர் டாக்டர் சந்திரமோகன் அவர்களும் நேரில் வந்து கலந்து கொண்டு இந்த நிகழ்ச்சி தொடக்க விழாவை சிறப்பித்ததோடு அதே நாளில் தமிழக அரசின் அருங்காட்சியகங்களுடன் இணைந்து, லிண்டன் அருங்காட்சியகத்துடன் புரிந்துணர்வு ஒப்பந்தத்தைக் கையெழுத்திட தமிழ் மரபு அறக்கட்டளை ஏற்பாடுகளை செய்து தந்தோம் என்பதை அறிவிப்பதில் பெருமை கொள்கின்றோம்.

இந்த மாபெரும் முயற்சியின் அடிப்படையில் தமிழ்நாட்டில் உள்ள அருங்காட்சியகங்களின் நிலையை மேம்படுத்தவும் அதிலும் குறிப்பாக அரும்பொருட்களின் பட்டியல்களை முறையாக கணினி மயப்படுத்தி ஆவணப்படுத்தி வைக்கும் முறையைத் தொடங்குவதற்கு இந்த முயற்சி தொடக்கமாக அமைந்துள்ளது. இந்த முயற்சியை வெற்றிகரமாக ஆக்கித் தருவதற்கு தமிழ்நாடு அரசின் அருங்காட்சியங்கள் துறை இணைந்து

ஒத்துழைக்க வேண்டும் என்பதையும் இந்த நிகழ்வில் எங்களது கோரிக்கையாக முன் வைக்கின்றோம்.

உலகம் முழுவதிலும் தமிழ் மக்கள் வாழ்கின்ற இச்சூழலில் தமிழ் மக்களுக்குத் தேவையான நூல்கள் எல்லா நாடுகளுக்கும் சென்று சேர்கின்றனவா என்றால் 'இல்லை' என்பதே நம் முன்னே இருக்கின்ற பதிலாக அமைகின்றது.

எனது தாயகமான மலேசிய சூழலை எண்ணிப் பார்க்கும் போது அங்குத் தமிழ்நாட்டில் வெளி வருகின்ற தரம் வாய்ந்த வரலாறு, சமூகவியல், மானுடவியல், இலக்கியம், நவீன இலக்கியம் போன்ற பல்துறை நூல்கள் அங்கே செல்வதே பெரும் கனவாக இருக்கின்றது. இந்தச் சூழ்நிலை மாற அதற்குத் தமிழ்நாடு அரசு மலேசியா, சிங்கை, இலங்கை போன்ற நாடுகளில் தொடங்கி பின்னர் ஐரோப்பிய நாடுகளிலும் அமெரிக்காவிலும் என புத்தகக் கண்காட்சிகளை ஏற்பாடு செய்து அங்கு வாழ்கின்ற தமிழ் மக்கள் தமிழ்நாட்டில் பதிப்பிக்கப்படுகின்ற லட்சக்கணக்கான நூல்களில் சில நூல்களாவது உலகத் தமிழ் மக்களுக்கு வந்தடைவதற்கு உதவ வேண்டும் என்றும் இவ்வேளையில் கேட்டுக் கொள்கின்றோம். இந்த முயற்சிக்குத் தொடக்கப் புள்ளியாக மலேசியாவில் புத்தக கண்காட்சியை ஏற்படுத்தி பல்வேறு பகுதிகளில் மக்களுக்குப் பயன்படும் வகையில் நூல்களை வாங்கிக் கொள்ள 2023 ஆம் ஆண்டில் தமிழ்நாடு அரசு புத்தகக் கண்காட்சியை மலேசியாவில் ஏற்படுத்தித் தர வேண்டும் என்றும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கின்றோம்.

தற்போதைய சூழலில் ஐரோப்பாவில் குறிப்பாக ஜெர்மனியில் உள்ள பல்கலைக்கழகங்களில் தமிழ் மொழி, பண்பாடு, சமூகவியல், மானுடவியல் ஆகிய பார்வையில் ஆய்வுகளை முன்னெடுக்க பல பல்கலைக்கழகங்கள் ஆர்வம் காட்டுகின்றன. தமிழ் இருக்கைகள் என்ற பெயரில் கோடிக்கணக்கான ரூபாய்களைச் செலவிட்டு இருக்கைகளை அமைப்பதை விட, உலகளாவிய பல பல்கலைக்கழகங்களுடன் இணைந்து ஆய்வுகளை மேற்கொள்ளும் முயற்சியைத் தமிழ்நாடு அரசின் உயர்கல்வித்துறை முன்னெடுக்க வேண்டும் என்றும் இத்தருணத்தில் கேட்டுக் கொள்கின்றோம். இத்தகைய இணைந்த செயல்பாடுகளுக்குப் பெருமளவிளான வாய்ப்பும் ஆர்வமும் ஐரோப்பிய கல்விக்கூடங்களில் தற்சமயம் நிலவுகின்றன என்பதை தமிழ் மரபு அறக்கட்டளை தமிழ்நாட்டு அரசின் உயர் கல்வித்துறையின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகின்றோம்.

தமிழ் மொழிக்கும் கிழக்காசிய மொழிகளான இந்தோனேசிய மொழி, மலாய், ஜப்பான், கொரியா, மங்கோலியா போன்ற மொழிகளுக்கும் இடையிலான ஒப்பாய்வுகள் என்பன தற்போது மிக மிகக் குறைந்து வருகின்றன. இத்துறையில் பணியாற்றிய முதுபெரும் அயல்நாட்டு, தமிழ்நாட்டு மற்றும் இலங்கை பேராசிரியர்கள் பலரை நாம் முதுமையின் காரணமாக இழந்து விட்டோம். இத்தகைய துறைகள் தற்சமயம் கவனிப்பாரற்று கிடப்பதைச் சுட்டிக்காட்டி தமிழ்நாட்டு பல்கலைக்கழகங்களும் தமிழ்நாட்டின் தமிழ்

ஆராய்ச்சி நிறுவனம் போன்ற ஆய்வு நிறுவனங்களும் இத்தகைய முயற்சிகளில் கவனம் செலுத்தி தமிழுக்கும் ஏனைய உலக மொழிகளுக்குமான ஆய்வுகளை முன்னெடுக்க சீரிய முயற்சிகளைத் தொடங்க வேண்டியது காலத்தின் கட்டாயம் என்பதையும் இந்தச் சூழலில் கவனத்திற்குக் கொண்டுவர தமிழ் மரபு அறக்கட்டளை விரும்புகின்றோம்.

கடந்த 250 ஆண்டுகளாக பிரெஞ்சு காலனித்துவ தீவுகளான மொரிசியஸ், ரியூனியன், பிஜி போன்ற தீவுகள் மட்டுமின்றி தென் அமெரிக்கா அருகே அமைந்துள்ள மார்த்தினிக், குவாதலப், செயின்ட் லூசியா, சுரினாம், கயானா போன்ற தீவு நாடுகளில் வாழும் தமிழ் மக்களின் பண்பாட்டு தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டிய தேவை நமக்கு முன்னே இருக்கின்ற மாபெரும் கடமையாக தமிழ் மரபு அறக்கட்டளை கருதுகின்றோம். இதற்குக் காரணம், இத்தகைய தீவுகளில் கடந்த 250 ஆண்டுகள் காலகட்டத்தில் தோட்டங்களில் கூலிகளாகப் பணியாற்ற வந்திறங்கிய தமிழ் மக்கள் படிப்படியாக உள்ளூர் மக்களுடன் கலந்து தங்கள் தமிழ் பண்பாட்டையும் மொழி அடிப்படைகளையும் இழந்து படிப்படியாக அவற்றை இழந்த நிலை வந்து கொண்டிருக்கிறது. 1940 களின் இறுதியில் இப்பகுதிகளுக்கு பயணம் செய்து இத்தீவுகளில் வாழ்கின்ற தமிழ் மக்களின் நிலையைப் பற்றி ஆராய்ந்து தகவல்களை ஆவணப்படுத்திய தனிநாயகம் அடிகளார் அக்கால கட்டத்திலேயே இங்கு வாழும் தமிழ் மக்கள் தமிழ் பண்பாட்டினை இழந்து வருகின்ற ஒரு அபாயகரமான சூழலில்

இருப்பதையும், ஆனால் தமிழ் மொழியைக் கற்பதிலும் தமிழ் பண்பாட்டுக் கூறுகளை மீட்டெடுப்பதற்கும் மிகுந்த ஆவலுடன் இருப்பதையும் தனது ஆவணங்களில் குறிப்பிட்டிருக்கின்றார்.

அண்மைய நிலையைக் காணும் போது தமிழ் மொழியை பேசுகின்றவர்களின் எண்ணிக்கை மிக மிகக் குறைந்து பத்துக்கும் குறைவானவர்களே என்ற வகையில் இந்த நாடுகளில் இந்த எண்ணிக்கை நிலை அமைந்திருக்கின்றது. இதனை மிக முக்கியமான ஒரு தேவையாகக் கருதி தமிழ்நாடு அயலக தமிழர் நலன் துறை மற்றும் தமிழ் இணையக் கல்விக் கழகம் மற்றும் தமிழ் வளர்ச்சி துறை இத்தீவுகளுக்கான சிறப்பு திட்டங்களை வகுத்து இங்கு வாழ்கின்ற மக்களுக்குத் தமிழ் மொழி, பண்பாடு ஆகிய கூறுகளைப் பயிற்சிகளாக வழங்குவதற்கும், இப்பகுதிகளுக்குத் தமிழ் ஆசிரியர்களை அனுப்பி தமிழ் கல்வி இங்கு படிப்படியாக வேரூன்ற உதவுவதற்கும் திட்டங்களை வகுக்க வேண்டும் என்று தமிழ் மரபு அறக்கட்டளை கேட்டுக் கொள்கின்றோம். இத்தகைய பணிகளைத் தொடங்குவதற்கு அடிப்படையான தகவல்களை வழங்கவும் தொடர்ந்து இத்தகைய முயற்சிகளில் இணைந்து செயலாற்றவும் தமிழ் மரபு அறக்கட்டளை ஆவலுடன் இருக்கின்றோம் என்பதையும் இத்தருணத்தில் குறிப்பிட்டு கொள்கின்றேன்.

வெளிநாடுகளில் வாழும் தமிழர்களாகிய நாங்கள் எங்கள் கோரிக்கைகளைத் தமிழ்நாட்டு அரசின்

கவனத்திற்கு கொண்டுவர அடிப்படையை ஏற்படுத்திக் கொடுத்து இந்த மாபெரும் நிகழ்வை ஏற்பாடு செய்து தந்திருக்கும் தமிழ்நாடு அரசின் முதலமைச்சர் மாண்புமிகு திரு மு. க ஸ்டாலின் அவர்களுக்கும், தமிழ்நாடு அரசின் அமைச்சர் பெருமக்களுக்கும் குறிப்பாக அயலக நலன் துறையினருக்கும் தமிழ் மரபு அறக்கட்டளையின் சார்பிலும் எனது தனிப்பட்ட சார்பிலும் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். அனைத்து பங்கேற்பாளர்களுக்கும் எனது நல்வாழ்த்துக்கள் வணக்கங்களும்.

அன்புடன்
முனைவர் க. சுபாஷிணி

## பச்சையப்பன் கல்லூரியுடன் புரிந்துணர்வு ஒப்பந்தம்

ஜனவரி 20, 2023



தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு தமிழ்நாடு சென்னை, பச்சையப்பன் கல்லூரியும் இணைந்து நிறைவேற்ற இருக்கும் பல்வேறு ஆக்கப்பூர்வமான பணிகளுக்கான புரிந்துணர்வு ஒப்பந்த நிகழ்வு இன்று (ஜனவரி 20, 2023) காலை பச்சையப்பா கல்லூரி வளாகத்தில் இனிதே நடந்தேறியது.பச்சையப்பா கல்லூரி தமிழ்த் துறை மாணவர்களுக்குத் தமிழ் மரபு அறக்கட்டளையின் உலகளாவிய அமைப்பு பல்வேறு மேம்பாடு நடவடிக்கைகளை இந்தப் புரிந்துணர்வு ஒப்பந்தத்தின் வழி வழங்கத் திட்டமிட்டு வருகின்றோம்.

வறுமையான சூழலில் இருந்து வந்து கல்வி கற்கும் மாணவர்கள் புதிய தொழில்நுட்பம் கணினி மற்றும் சுற்றுச்சூழல் விழிப்புணர்வு வரலாற்று விழிப்புணர்வு ஆகிய துறைகளிலும் தகவல்களைப் பெறவும்

பச்சையப்பா கல்லூரியில் ஒரு கல்லூரி அருங்காட்சியகத்தை அமைக்கவும் இந்த புரிந்துணர்வு ஒப்பந்தம் வழிவகுக்கும் வகையில் அமைத்திருக்கின்றோம்.





## பேட்ரீசியன் கல்லூரியுடன் புரிந்துணர்வு ஒப்பந்தம்

ஜனவரி 24, 2023




தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பும், சென்னை அடையாறு பகுதியில் உள்ள பேட்ரீசியன் கல்லூரியும் புரிந்துணர்வு ஒப்பந்தம் ஒன்றினை கையெழுத்திட்ட சிறப்பு நிகழ்ச்சி இன்று ஜனவரி 24, 2023 நடைபெற்றது. மாணவர்களுக்கான வரலாற்று விளக்கப் பயணங்கள், கண்காட்சிகள், வரலாற்றுக் கருத்தரங்கங்கள், ஆய்வுகள் ஆகியவற்றை முன்னிலைப்படுத்தி இந்த புரிந்துணர்வு ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டது.

கல்லூரியின் பேராசிரியர்கள் வரலாற்று பாதுகாப்பில் மிகுந்த ஆர்வத்துடன் இருக்கின்றார்கள் என்பதும், கல்லூரி முதல்வர் இயக்குநர் மற்றும் துறை சார்ந்த பேராசிரியர்கள் தமிழ்த் துறைத் தலைவர் சகோதரர் ராஜசேகரன் மற்றும்

மாணவர்கள் காட்டிய பேரார்வமும் மகிழ்ச்சி அளிக்கிறது.கல்லூரி நிர்வாகத்தினர் பேராசிரியர்கள், முதல்வர், இயக்குநர் மற்றும் மாணவர்கள் அனைவருக்கும் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் நல்வாழ்த்துக்கள். பேட்ரீசியன் கல்லூரியில் வரலாற்று பாதுகாப்பில் இளைஞர்களின் பங்கு என்பது குறித்து ஒரு உரை முனைவர் க. சுபாஷிணியால் நிகழ்த்தப் பட்டது.



# தமிழக அருங்காட்சியகங்கள் மேம்பாடு தொடர்பான கலந்தாலோசிப்பு கூட்டம்

ஜனவரி 25, 2023



தமிழக அருங்காட்சியகங்கள் மேம்பாடு தொடர்பான ஒரு சந்திப்பு கலந்தாலோசிப்பு கூட்டம் சென்னை அருங்காட்சியகத்தில் ஜனவரி 25, 2023 நடைபெற்றது. முதலமைச்சரின் செயலர் திரு சண்முகம் இ.அ.ப, மற்றும் தற்காலிக அருங்காட்சியக பொறுப்பு ஆணையர் திரு சந்திப் நந்தூரி இ.ஆ.ப, மற்றும் அருங்காட்சியக பொறுப்பாளர்களும் தமிழ் மரபு அறக்கட்டளையின் அருங்காட்சியக பொறுப்பாளர்களும் இந்தச் சந்திப்புக் கூட்டத்தில் கலந்து கொண்டார்கள்.

## வேதாரண்யம் என்கின்ற பெயரை அதன் மூல தமிழ்ப் பெயருக்கு மாற்றம் செய்ய கோரிக்கை

ஜனவரி 26, 2023



வேதாரண்யம் என்கின்ற பெயரை அதன் மூல தமிழ்ப் பெயருக்கு மாற்றம் செய்ய கோரிக்கை

சங்கத் தமிழ் இலக்கியங்கள் தொடர்பான ஆய்வுகளை நிகழ்த்த வாய்ப்பு அமைத்துத் தரும் வகையில் சங்கத் தமிழுக்கான தொடரடைவுகள் மற்றும் அருஞ்சொல் அகராதி சங்கத்தமிழ் இலக்கியங்கள் ஆகியவற்றை மிக நீண்ட காலமாக நம் பேராசிரியர் பாண்டியராஜா அவர்கள் அரும்பாடு பட்டு தயாரித்துத் தந்துள்ளார். இவற்றை தமிழ் மரபு அறக்கட்டளை வலைப்பக்கத்தில் சங்கம்பீடியா என்ற பெயரில் தனித்தளமாக உருவாக்கி வருகின்றோம். இந்த வலைப் பக்கத்தை அதிகாரப்பூர்வமாக வெளியிடும் வகையில் திட்டம் ஒன்றை தமிழ் மரபு அறக்கட்டளை யோசித்து வருகின்றோம். அது தொடர்பாகப் பேசுவதற்காக

இன்று தமிழ்நாடு அரசின் பள்ளி கல்வித்துறை அமைச்சர் மாண்புமிகு திரு. அன்பில் மகேஷ் பொய்யாமொழி அவர்களை நேரில் சென்று சந்தித்தோம்.

அப்போது இச் சங்க இலக்கிய களஞ்சியத்தின் இணைய வலைப்பக்கத்தை தமிழ்நாடு அரசின் முதல்வர் அவர்கள் தொடங்கி வைக்க வேண்டுகோள் விடுத்தோம். அதற்கு ஆவண செய்வதாக அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்.

வேற்று மொழி பெயர்களுக்கு மாற்றம் செய்யப்பட்ட ஊர்களுக்கு அதன் மூல தமிழ்ப் பெயர்களை வைக்க வேண்டும் என்றும் வேண்டுகோள் விடுத்தோம். அதன் அடிப்படையில் வேதாரண்யம் என்கின்ற பெயரை அதன் மூல தமிழ்ப் பெயருக்கு மாற்றம் செய்ய கோரிக்கை விடுத்து கடிதத்தை அமைச்சரிடம் வழங்கினோம்.

வேதாரண்யம் ஊருக்கான தமிழ்ப் பெயர் மூல சான்றுகளை வழங்க உதவிய டாக்டர் செல்வகுமார், டாக்டர் சிவராமகிருஷ்ணன் மற்றும் முனைவர் தேமொழி ஆகிய மூவருக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றி.

முனைவர் க.சுபாஷிணி,
நிறுவனர் / தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு
இயக்குநர், கடிகை – தமிழ் மரபு முதன்மைநிலை இணையக் கல்விக் கழகம்

மதுரையில் ஒரு நாள் வரலாற்று மரபுப் பயணம்

மார்ச் 12, 2023






மார்ச் 12, 2023 – ஞாயிற்றுக்கிழமை அன்று தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு ஏற்பாடு செய்த மதுரையில் ஒரு நாள் வரலாற்று மரபுப் பயணத்தில் தமிழ் மரபு அறக்கட்டளை குழுவினர் ...

– லாடன் கோயில் புடைப்புச் சிற்பங்கள்
– ஆனைமலை நரசிம்ம பெருமாள் கோயில் வட்டெழுத்து கல்வெட்டுக்கள்
– ஆனைமலை சமணச் சிற்பங்கள் கல் படுக்கைகள் ஆகிய இடங்களைப் பார்வையிட்டனர்.













மதுரையில் ஒரு நாள் வரலாற்று மரபுப் பயணம்
– மேலும் படங்கள்
https://photos.app.goo.gl/EbfXqh2SZFFt98sE9

## இணைய வழி தமிழி கல்வெட்டுப் பயிற்சி

மார்ச் 18, 2023



மார்ச் 18, 2023 – சனிக்கிழமை அன்று தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு ஏற்பாடு செய்த இணைய வழி தமிழி கல்வெட்டுப் பயிற்சியில் இணையவழியில் மாணவர்கள் பங்கேற்றனர்.



## அகம் புறம் கண்காட்சி: தமிழ் பாரம்பரிய உடைகளை ஜெர்மானியர்களுக்கு அறிமுகப்படுத்துதல்

மார்ச் 25, 2023



ஜெர்மனியின் பாடன் ஊர்ட்டன்பெர்க் மாநிலத்தின் தலைநகரான ஸ்டுட்கார்ட் நகரில் மார்ச் 25, 2023 அன்று அருங்காட்சியக நாள் நிகழ்வு நடைபெற்றது. இந்நிகழ்ச்சியையொட்டி தமிழ்க் கண்காட்சியாக அகம் புறம் ஆறு மாத கால கண்காட்சி நடைபெற்று வரும் 'லிண்டன் அருங்காட்சியகத்தில்,' தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பினால் 'தமிழ் பாரம்பரிய உடைகளை அயல் நாட்டவர்களுக்கு அணிவிக்க கற்றுக் கொடுக்கும் பயிற்சி' ஒன்றும் உள்ளூர் ஜெர்மானிய மக்களுக்கு வழங்க ஏற்பாடு செய்யப் பட்டது.

தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் ஜெர்மனி குழுவினர் இந்த பட்டறையில் அயல் நாட்டவர்களுக்கும் தமிழ்ப் பண்பாட்டு உடைகளை அணிந்து கொள்வதற்கு உதவியும், தமிழ்நாட்டுத் துணி வகைகளைப் பற்றி அறிமுகம் வழங்கியும் விளக்கம் அளித்தார்கள். ஜெர்மனி குழுவினர் அனைவருக்கும் மற்றும் ஸ்டுட்கார்ட் தமிழ்ச் சங்க சகோதர சகோதரிகளுக்கும் லிண்டன் அருங்காட்சியகத் தோழர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றி.








இளைஞர்கள், நடுத்தர வயதினர், ஆண்கள், பெண்கள், குழந்தைகள் எனப் பல தரப்பினரும் இந்தப் பயிற்சியில் ஈடுபாட்டுடன் கலந்து

கொள்ளவும் தமிழர் பண்பாட்டு உடைகளை அணிந்த மகிழ்வும் வந்தது மகிழ்ச்சி. இத்தகைய நிகழ்ச்சிகளின் வழி தமிழர் வாழ்வியல் கூறுகளை ஐரோப்பியர்களுக்கு எடுத்துச் செல்லும் பணி மகிழ்வானதாகவும் அமைகிறது.



ஏறக்குறைய 100 பேருக்கு மேல் இந்த பயிலரங்குக்கு வந்து தங்கள் ஆர்வத்தைக் காட்டியது பெரு மகிழ்ச்சி அளித்தது. தமிழ் மொழி, பண்பாடு, வாழ்வியல் கூறுகள் ஆகியவற்றை உள்ளூர் ஜெர்மானிய மக்களுக்கும் தகவல் பகிர்ந்து கொள்ள ஸ்டுட்கார்ட் மாநிலத்தில் தமிழ் மக்களுக்கு வாய்ப்பு வழங்கும் இந்த மாநிலத்தின் லிண்டன் அருங்காட்சியக பொறுப்பாளர்கள் அனைவருக்கும் எங்களின் பாராட்டுகளும் நல்வாழ்த்துக்களும்.

முனைவர் க. சுபாஷிணிதலைவர்
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு
அமைப்பு,ஜெர்மனி

# சென்னை பச்சையப்பர் கல்லூரி-தமிழ் மரபு அறக்கட்டளை அமைப்பின் முன்னெடுப்பில் தமிழ்த்தோட்டம் பசுமை விழா

மார்ச் 31, 2023




சென்னை பச்சையப்பர் கல்லூரி வளாகத்தில் வள்ளல் பச்சையப்பர் நினைவு நாளான மார்ச் 31, 2023 அன்று கல்லூரியினரும் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் தமிழ்நாடு செயற்குழுவினரும் தமிழ்த் தோட்டம் என்ற பசுமை விழா நிகழ்வைத் தொடக்கி வைத்தனர்.

இந்த ஆண்டு தொடக்கத்தில் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு சென்னையின் சிறப்புமிக்க பச்சையப்பா கல்லூரியின் தமிழ்த்துறையுடன் புரிந்துணர்வு ஒப்பந்தம் செய்த செய்தியைப் பகிர்ந்திருந்தோம்.

அவ்வகையில் இணைந்த வகையிலான பணிகளைத் தமிழ் மரபு அறக்கட்டளை வருகின்ற வெள்ளிக்கிழமை 31ஆம் தேதி மார்ச் மாதம் 31ஆம்

தேதி பச்சையப்பர் கல்லூரியில் தொடங்கினோம். வள்ளல் பச்சையப்பர் நினைவைப் போற்றும் வகையில் கல்லூரி வளாகத்தில் தமிழ்த் தோட்டம் உருவாக்கும் பணி இந்த நாளில் தொடங்கப்பட்டது என்ற செய்தியைப் பகிர்ந்து கொள்வதில் மகிழ்ச்சி கொள்கின்றோம்.




இயற்கையோடு இணைந்த வகையில் மாணவர்களின் கல்விச் செயல்பாடுகள் இயங்கும் போது மாணவர்களுக்குக் கல்வியில் ஆழமான ஈடுபாடு தோன்றும். ஆசிரியர்களும் மாணவர்களும் புத்துணர்ச்சியுடன் செயல்பட வழிவகுக்கும் என்ற நோக்கத்துடன் இந்தத் தமிழ்த் தோட்டம் என்ற நிகழ்ச்சியை ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இதன் வழி கல்லூரியின் பசுமையான பகுதிகள் பாதுகாக்கப்பட்டும் தாவர வகைகள் நட்டுப் பராமரிக்கும் செயல்பாடுகள் தொடங்கப்படுவதும் நடைபெறவிருக்கிறது.

**காணொளி:** https://youtu.be/2ZDQkiPSN8g

மரபுக் காணொளி வெளியீடுகள்:




பிப்ரவரி 5, 2023
ஆனைமங்கலம் கோயிலின் இன்றைய நிலை
https://youtu.be/FcJHcRUVyBI

****




மார்ச் 3, 2023
தரங்கம்பாடி சீகன்பால்க் பள்ளி,  அச்சு இயந்திரம்
https://youtu.be/FNJ__TxHjP0

## இணையவழி திசைக்கூடல் நேரலைகள்:




திசைக் கூடல் — 314 [ஜனவரி 1, 2023]
2023 புத்தாண்டு கொண்டாட்டம்
தமிழ் மரபு அறக்கட்டளை குழுவினர்
https://youtu.be/vFJEDxtlqLo

****




திசைக் கூடல் — 315 [ஜனவரி 19,2023]
"விளையாடிய தமிழ்ச்சமூகம்" நூல் திறனாய்வு
— முனைவர். வா. நேரு
https://youtu.be/npA-YzTuwNs

****




திசைக் கூடல் — 316 [ஜனவரி 27,2023]
"அறியப்பட வேண்டிய தமிழகம்" நூல் திறனாய்வு
— திரு. இரா. முத்து கணேசு
https://youtu.be/kKDdW-tr7KY

****




திசைக் கூடல் — 317 [ஜனவரி 29,2023]
கொடைக்கானல் வட்டத்தில் பெருங்கற்காலப் பண்பாடு
— முனைவர் செ.கௌரிசங்கர்
https://youtu.be/8lF3u9foaq4




திசைக் கூடல் — 318 [பிப்ரவரி 4, 2023]

நீரும் நாமும்

— நன்னீர் கார்த்திகேயன்

https://youtu.be/PMCkQrP6ziM

****




திசைக்கூடல் — 319 [பிப்ரவரி 11, 2023]

இயற்கை வேளாண்மையும் கைத்தறி நெசவும்

— ஆரண்ய அல்லி

https://youtu.be/rLvpM9_R-sU




திசைக் கூடல் — 320 [பிப்ரவரி 18, 2023]
தமிழ் அழகியலும் மேற்குலக ஓவியக் கலையும்
— 'கலை இலக்கிய விமர்சகர்' இந்திரன்
https://youtu.be/KgKoiJ26DIo

****




திசைக்கூடல் — 321 [பிப்ரவரி 25, 2023]
தமிழிசை இலக்கண மரபை முன்மொழிந்த ஆபிரகாம் பண்டிதர்
— முனைவர். ஆ. ஷைலா ஹெலின்
https://youtu.be/lKc_SZOScRc




திசைக்கூடல் — 322 [மார்ச் 5, 2023]
உலக மகளிர் நாள் சிறப்பு நிகழ்ச்சி
“அயலி கருத்துருவாக்கமும் கட்டுடைத்தலும்”
https://youtu.be/iykNHLVJ-JE

****




திசைக்கூடல் – 323 [மார்ச் 11, 2023]
மகதை மண்டல வரலாறு
— ஆறகழூர் பொன். வெங்கடேசன்
https://youtu.be/IiXl242QwoQ



"இலக்கிய மீளாய்வு" – நூல் திறனாய்வு
திசைக்கூடல் – 324 [மார்ச் 26, 2023]
— முனைவர். மு. இறைவாணி
https://youtu.be/k9iFTbENDLg

நூல் வெளியீடு:




இலக்கிய மீளாய்வு
முனைவர் தேமொழி
முதல் பதிப்பு -2023
ISBN: 9798885892469
பக்கங்கள்: 116
விலை: ரூ. 150

இலக்கிய மீளாய்வு
ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பு

இலக்கிய மீளாய்வு:
இலக்கியங்கள் மீள்வாசிப்புக்கு உட்படுத்தப்பட வேண்டும். மீள்வாசிப்பு புதிய கோணங்களில் காலத்தின் தேவைக்கேற்ப புதிய வெளிச்சங்களை வாசிப்போருக்கு உணர்த்தும். எந்த கேள்விக்கும் இடம் கொடுக்காமலேயே, அவை சரிதானா என யோசிக்காமலேயே சொன்னதையே மீண்டும்

மீண்டும் சொல்லிக் கொண்டிருக்கும் நம் பழமைவாத சூழலில் மாற்றம் தேவை. அந்த வகையில் 10 கட்டுரைகளின் வழியாக இலக்கிய மீளாய்வு நிகழ்த்துகின்றது இந்த நூல்!

தமிழ் மரபு அறக்கட்டளை நூல்கள்:
https://academy.tamilheritage.org/2022/05/28/1875/

நூல்களை இணையம் வழியாக கீழ்க்காணும் தளங்களில் பெறலாம்:
https://www.commonfolks.in/books/tamil-heritage-foundation

https://wisdomkart.in/books-publication/tamil-heritage-foundation/

